உ

சிவமயம்

# திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம்

வெளியீடு எண் : 620

திருவாவடுதுறை ஆதீனம்

2011

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்
திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான

சென்னை, அரும்பாக்கம்,

**அருள்மிகு வினைதீர்த்த விநாயகர்,**
**அருள்மிகு திருச்சிற்றம்பலநாயகி உடனாய**
**அருள்மிகு திருச்சிற்றம்பலநாதர் திருக்கோயில்**

# திருக்குடப்புனித நன்னீராட்டு விழா மலர்

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம்
திருவாவடுதுறை ஆதீனம்
23-ஆவது குருமகாசன்னிதானம்
**சீர் வளர் சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**
அவர்கள்
**திருவுளப்பாங்கின் வண்ணம் வெளியிடப்பெறுகிறது.**

திருவள்ளுவர் ஆண்டு 2042
மெய்கண்டார் ஆண்டு 788
விக்ருதி ஆண்டு மாசித்திங்கள் 4-ஆம் நாள்

**16.02.2011**

உரிமைப் பதிவு :
வெளியீடு எண் : 620

முதற்பதிப்பு : 1949
இரண்டாம் பதிப்பு : 2011

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம்

நூலாசிரியர்
**சீனிப்புலவர்**

அரும்பத உரையாசிரியர்
*ஆதீனவித்துவான், சித்தாந்தசைவ நன்மணி*
**த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை**

-: பதிப்பாசிரியர் :-
*தமிழ்ப்பணிச்செம்மல்*
**புலவர் சி.மகாலிங்கம்** எம்.ஏ., பி.எட்.,
*முதுகலையாசிரியர் (பணிநிறைவு)*
*திருவாவடுதுறை ஆதீனம் மேனிலைப்பள்ளி*
*திருவிடைமருதூர்*



ஆதீனம் குரு முதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குரு நமச்சிவாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

# பொருளடக்கம்



திருவாவடுதுறை ஆதீனம்

23ஆவது குரு மகாசன்னிதானம்

**ஸீர்வளர்ஸீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிப்புரை

அருள்வளர் நந்தி மேதகை விளங்கி
யருள்சிவ ஞானபோ தத்தைத்
தெருள்வளர் தமிழ்செய் தளித்தமெய்
கண்ட தேவ னற் சந்ததி விளங்க
வருமொரு துறைசைத் திருநகர்
நமச்சிவாய தேசிகனொடு மிந்தக்
குருபரன் வழிவந் தருணனி கொழிக்குங்
குரவர்கள் பலரையுந் துதிப்பாம்

-குருபரம்பரை விளக்கம்
மங்கல வாழ்த்து

திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறை ஆதீனம் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகளால் திருவாவடுதுறையில் மடாலயம் அமைத்து ஞானப் பரம்பரை தோற்றுவிக்கப்பெற்றது. அஞ்ஞானப் பரம்பரை ஆல்போல் தழைத்து அருகென வேரோடி சைவத்தையும் தமிழையும் வளர்த்துவருகின்றது. இவ்வாதீன மடாலயம் தோன்றிய காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு ஆகும்.

இவ்வாதீனம் மக்கள் நலனில் உள்ளம் பதித்துச் சமுதாயப் பணிகளையும் ஆற்றிவருகின்றது.

ஊரும் நாடும் நலமுடன் திகழ மக்கள் திருக்கோயிலை வழிபட வேண்டும். திருமுறைகளின் சிறப்பை உணர்ந்து ஓதவேண்டும். சைவசமயத்தத்துவமாக விளங்கும் சைவசித்தாந்தத்தையும் அறிய வேண்டும் என்னும் கோட்பாட்டுடன் திருக்கோயில் திருப்பணி, திருமுறைகள் சைவ சித்தாந்தம் ஆகிய நூல்களைத் தக்கவர்களுக்கு உபதேசித்தல் போன்ற உயரிய பணிகளை அன்று முதல் இன்று வரை செய்து வருகின்றது.

## 23-ஆவது குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் :

தற்பொழுது 23ஆவது ஞானபீடத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் ஆதீனத்திற்குச் சொந்தமான பாடல் பெற்ற திருத்தலங்கள், திருவாசகத்தலம் என திருக்கோயில்கள் யாவும் திருப்பணிகள் செய்து திருக்குடமுழுக்கு நடந்தேறியுள்ளன. கிராமக்கோயில்கள் விநாயகர் திருக்கோயில்கள் என நாற்பதிற்கும் மேற்பட்ட திருக்கோயில்கள் திருப்பணிசெய்து குடமுழுக்கு நடத்தப்பெற்றன.

சைவ சித்தாந்த செந்நெறி எங்கும் பரவ சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம் 1992ல் தொடங்கி இதுவரை 30000 மாணவர்கள் பயின்று பயன் பெற்றுள்ளனர்.

திருமுறைகளை மக்கள் உணர்ந்து பண்ணோடும் பொருளோடும் அறிய திருமுறை நேர்முகப் பயிற்சி மையம் தொடங்கப்பெற்றது. இதுவரை ஐந்தாயிரம் மாணவர்கள் பயன் பெற்றுள்ளனர்.

சைவசமயம் சார்ந்த நூல்கள் வெளியிடப் பெறுகின்றன. 'மெய்கண்டார்' என்னும் திங்களிதழ் வெளியிடப் பெறுகின்றது. இவ்விதழ் மிகக்குறைந்த விலையில் தனிப்பிரதி ரூ.5-க்கு மக்களுக்குப் பயன்படும் வகையில் வெளிவருகிறது.

தமிழும், தமிழிசையும், வேதமும் ஆகமமும் வளர அதில் சிறந்த வல்லுநர்களுக்குப் பொற்கிழி, பொன்னாடை, உருத்திராக்க மாலை, விருது ஆகியன வழங்கிச் சிறப்பிக்கப்பெறுகின்றது.

ஆண்டுதோறும் குருபூசை விழா பத்துநாட்கள் நடத்தப்பெறுகிறது. அவ்விழாவில் தமிழறிஞர்கள், ஆகமவல்லுநர்கள் வேதவித்துக்கள் ஆகியோரின் சொற்பொழிவுகள் நடத்தப்பெறுகின்றன. திருவள்ளுவ -நாயனார் குருபூசை, சிவஞானமுனிவர் திருநட்சத்திரத் திருநாள், கவிராட்சச கச்சியப்பமுனிவர் திருநட்சத்திரத்திருநாள், வீழிச் சிவாக்கிரயோகிகள் குருபூசை, ஆறுமுக நாவலர் குருபூசை என சிறப்பு நாட்களும், கலைமகள் விழா, விநாயகர் சதுர்த்தி, ஞானமாநடராசப் பெருமான் ஆறுகால அபிஷேகம் போன்ற விழாக்களும் சிறப்பாக நடத்தப் பெறுகின்றன. இவ்விழாக்களில் தமிழறிஞர், ஓதுவார்கள் முதலானோர்க்குப் பொன்னாடை, பொற்கிழி விருது, உருத்திராக்கமாலை ஆகியன வழங்கப் பெறுகின்றன.

ஆதீனத்திருக்கோயில்களில் திருத்தேரோட்டம் சிறப்பாக நிகழ மயிலாடுதுறை, திருப்பெருந்துறை, திருவிடைமருதூர் ஆகியத் தலங்களில் புதிய திருத்தேர்கள் செய்து திருத்தேரோட்டமும் நிகழ்த்தப்பெற்றது.

சமுதாயப்பணிகளாக மேனிலைப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி நடுநிலைப்பள்ளி, தொடக்கப்பள்ளி, மழலையர்பள்ளி, மெட்ரிக்குலேஷன் பள்ளி என பல

பள்ளிகள் நடத்தப்பெறுகின்றன. இப்பள்ளிகளில் பயிலும் ஏழை மாணவர்களுக்குக் காலைச் சிற்றுண்டி வழங்கப்பெறுகிறது. ஆதீனத்திற்குச் சொந்தமான கோயில்கள், கிளைமடங்கள் யாவற்றிலும் காலைச் சிற்றுண்டி, மதியத்தில் அன்னதானம் வழங்கப் -பெறுகின்றது. ஏழை மாணவர்களுக்குக் கல்வி உதவித்தொகை, முதியோர்களுக்கு உதவி, வறுமையுற்றோர்க்கு உதவி யாவும் வழங்கப்பெறுகின்றன.

நலிந்த திருக்கோயில்களுக்கும் மடங்களுக்கும் உதவி என எண்ணற்ற பணிகள் 23ஆவது சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் நடைபெற்றுவருகின்றன.

மேலும் சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருக்கோயில்களின் தலவரலாறு வெளியிட்டரு -ளுகின்றார்கள். அது மட்டுமின்றி ஆதீனத்திற்குச் சொந்தமான கிராமக்கோயில்கள் குடமுழுக்கின்போது குடமுழுக்குவிழா மலராக அத்தல வரலாறு வெளியிட திருவுளம் பற்றி வெளியிட்டருளுகின்றார்கள். இதனால் அக்கிராமமக்கள் பேருவகைக் கொண்டு குருமகா சன்னிதானம் அவர்களை நன்றிப் பெருக்கால் போற்றுகின்றனர். ஆதீனத்திற்குச் சொந்தமான மஞ்சமல்லி கிராமம் அருள்மிகு மந்திரபுரீஸ்வரர் திருக்கோயில் தலவரலாறு, வடுமாங்குடி கிராமம் அருள்மிகு சீதளா தேவியம்மன் திருக்கோயில் தலவரலாறு, பழியஞ்சிய நல்லூர் கிராமம் அருள்மிகு கைலாசநாதர் திருக்கோயில் தலவரலாறு ஆகியவை சான்றுகளாகும்.

தற்பொழுது சென்னை அரும்பாக்கம் தலத்தின் சிறப்பை அறிய அத்தலத்தில் அவதரித்த திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளின் பெருமையை யாவரும் உணர, திருவாவடுதுறை ஆதீனத்திற்கும் சென்னைக்கும் உள்ள நீண்ட நெடிய தொடர்பைத் தெரிந்து கொள்ள அருள்மிகு வினைதீர்த்த விநாயகர், அருள்மிகு திருச்சிற்றம்பல நாயகி உடனாய அருள்மிகு திருச்சிற்றம்பல நாதர் திருக்கோயில் திருக்குடப்புனித நன்னீராட்டுப் பெருவிழா மலர் வெளியிடப்பெறுகிறது. அரும்பாக்கத்தில் அவதரித்த ஆதீனத்து 12 ஆவது குருமகா சன்னிதானம் அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர் மீது சீனிப்புலவரால் பாடப்பெற்ற திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம் என்னும் நூல் விழா மலராக வெளிவர சீர்வளர்சீர் 23ஆவது குருமகாசன்னிதானம் அவர்கள் திருவுளம் பற்றினார்கள். குருமகா சன்னிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் சைவம் புரக்கும் தாளாளர் சென்னை திரு.எம்.வி. ஜெய்சங்கர் பி.இ., அவர்களின் உபயமாக இம்மலர் வெளிவருகின்றது.

**அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம்:**

இந்நூலை இயற்றியவர் சீனிப்புலவர். இவர் சிறந்தபுலவர் குலத்தில் தோன்றியவர். இவர் அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளிடத்தில் சிவஞானோபதேசமும், நிருவாண தீக்கையும் பெற்றவர் சிவபூஜையை தவறாது செய்து வந்தவர்.

**அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர் :**

இக்கலம்பகத்துள்
"சீர்த்தவ வடிவாய் உதித்த திருச்சிற்றம்பலவன்"
"திருச்சிற்றம்பல குருவே தவத்தர் கோவே"
'ஐம்படைப்புன் காமனை வென்றடர்த்து

ஞானப் பொருள் படைக்குந்துறைசை வரு திருச்சிற்றம் பலகுரவன்' என்று திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் போற்றப்பெறுகின்றார்.

அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர் மெய்கண்ட சாத்திரம், பண்டாரசாத்திரம் ஆகிய ஞானநூல்களில் வல்லவர். பதினொன்றாவது குருமகாசன்னிதானம் பின் வேலப்பதேசிக மூர்த்திகள் திருப்பெருந்துறையில் பரிபூரணம் எய்தியபின் பன்னிரண்டாவது குருமகாசன்னிதானமாக திருச்சிற்றம்பல தேசிகமூர்த்திகள் ஞானபீடமேறினார்கள். அருள்திறம் கொண்டு அற்புதங்களை நிகழ்த்தியவர்கள்.

மாதவச் சிவஞான யோகிகள் மாணவர்களின் ஒருவராகிய தொட்டிக்கலை சுப்பிரமணியத் தம்பிரான் சுவாமிகள் இவர் மீது சிந்தும், சந்தவிருத்தமும் பாடியுள்ளார்.

திருவாவடுதுறைத் தலப்புராணப் பாயிரம், திருப்பாதிரிப்புலியூர்ப் புராணப் பாயிரம், ஞானதேசிகர் கலம்பகம் முதலிய நூல்கள் திருச்சிற்றம்பல தேசிகமூர்த்திகளைப் போற்றுகின்றன

இத்திருச்சிற்றம்பல தேசிகர் அருளாட்சியில் திருவெண்ணெய் நல்லூர் அருள்திரு மெய்கண்ட தேவநாயனார் குருமூர்த்தத் திருக்கோயில் திருப்பணி செய்யப்பெற்று திருக்குடமுழுக்கு செய்யப்பெற்றது. திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் அருளாணையின் வண்ணம் சீர்மன்னு சிதம்பரநாதத்தம்பிரான் சுவாமிகள் முத்துமாணிக்க வாசகத் தம்பிரான் சுவாமிகள் ஆகியோர் முன்னின்று திருப்பணிகள் செய்தனர். தற்பொழுது

ஞானபீடத்தில் விளங்கும் 23-ஆவது சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் திருப்பணி செய்யப்பெற்று 19.05.1994 ஆம் ஆண்டு திருக்குடமுழுக்கு நடத்தப் பெற்றது. திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகத்திற்கு சிறந்த ஆராய்ச்சிஉரையும், அரும்பதவுரையும் எழுதியவர் திருவாவடுதுறை ஆதீன வித்துவான் த.ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆவார் இவர் திருவாவடுதுறை ஆதீனத்தின் மீதும் ஞானபீடத்தில் எழுந்தருளிய குருமகாசன்னிதானம் அவர்களிடத்தும் பக்தியும், விசுவாசமும் கொண்டவர். பல நூல்களைப் பதிப்பித்தவர். இவ்வாதீனத்து 20ஆவது குருமகாசன்னிதானம் அவர்கள் அருளாட்சியில் ஆதீனவித்துவான் என்னும் சிறப்பைப் பெற்றவர். சிவநெறிபேணி ஒழுகிய தமிழ்ப்பற்றாளர்.

இவர் நோய்வாய்ப் பட்டு இறக்கும் நிலையில் உற்றார்யாரையும் எண்ணாது

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாக தமிழ்செய்யு மாறே."

என்று திருமூலர் அருளிய திருமந்திர வரிகளைச் சொல்லியபடியே இவ்வுலக வாழ்வை நீத்தார் இதிலிருந்து அவரது தமிழ்ப்பற்றை உணரலாம்.

இவரது இறுதிகாலம் வரை சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் உதவியதோடு அவர் சிவலோக பதவிஅடைந்தஅன்று ஆதீன மரியாதைகள் செய்ய அருளாணையிட்டார்கள். அருளாணையின்படி ஆதீன மரியாதைகள் செய்யப்பெற்றது.

சிறந்த தமிழறிஞரால் உரைவகுக்கப் பெற்று அருள்மிகு திருச்சிற்றம்பலநாயகி உடனாய திருச்சிற்றம்பல நாதர் திருக்கோயில் குடமுழுக்குவிழா மலர் வெளிவருவது ஆதீனத்துத் திருச்சிற்றம்பல முடையரய் விளங்கும் அருள்மிகு ஞானமாநடராசப் பெருமானின் திருவருள் பெருக்காகும்.

**நூலின் உள்ளே**

இந்நூலில் அரும்பாக்கம் தலச்சிறப்பு, திருச்சிற்றம்பல தேசிகர் அருள்வாழ்வு, ஆதீனச் சம்பிரதாயங்கள் மற்றும் ஆதீனச் சிறப்புகள் யாவும் கண்டு மகிழலாம்.

இந்நூல் இவ்வாதீனத்து 20- ஆவது குருமகாசன்னிதானம் அருள்திரு அம்பலவாணதேசிக மூர்த்திகள் அருளாட்சியில் 1949-ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது. தற்பொழுது இரண்டாம் பதிப்பாக 16.02.2011 அன்று அரும்பாக்கம் அருள்மிகு வினைதீர்த்த விநாயகர் அருள்மிகு திருச்சிற்றம்பல நாயகி உடனாய அருள்மிகு திருச்சிற்றம்பலநாதர் திருக்கோயில் திருக்குடப்புனித நன்னீராட்டுவிழா மலராக வெளிவருகிறது.

**குருவருளும் திருவருளும் சித்திக்க :**

சீர்-வளர்-சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் இந்நூலை உபயமாக அளிக்கும் சைவம் புரக்கும் தாளாளர் சிவத்திரு எம்.வி.ஜெய்சங்கர் பி.இ., அவர்களுக்கும் இந்நூல்

பதிப்பிக்குங்கால் உறுதுணையாய் விளங்கிய திருவாவடுதுறை ஆதீன நடுநிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு.தே. சுடலைமுத்து எம்.ஏ., பி.எட்., அவர்களுக்கும் திரு.P.கோமதிநாயகம் M.Com., B.Ed., அவர்களுக்கும் திருவிடைமருதூர், தி.ஆ.மேனிலைப்பள்ளி முதுகலையாசிரியர் திரு.P.முத்துக்குமார் M.Com., B.Ed., அவர்களுக்கும் குருவருளும் திருவருளும் சித்திக்கப் பிரார்த்திக்கின்றேன்.

திருத்தாள்போற்றி :

இத்தகு சிறப்புடைய நூலுக்குப் பதிப்பாசிரியராக பணிகொண்டு கடையவனேனைக் கலந்தாண்டருள் செய்யும் திருவாவடுதுறை ஆதீனத்து23-ஆவது ஞானபீடத்தில் எழுந்தருளி அஞ்ஞானம் அகற்றி மெய்ஞ்ஞானம் அருளும் சீர்வளர்சீர் குருமகா **சன்னிதானம்** அவர்கள் திருத்தாள்போற்றி வணங்கித் துதித்துப் பணிகின்றேன்.

58, தெற்குவீதி,
திருவிடைமருதூர்.
போன் : 0435: 2460027
செல் : 90034 59651

இங்ஙனம்,
என்றும் குருவருட்பணியில் அடியவன்
புலவர் சி.மகாலிங்கம்
எம்.ஏ., பி.எட்.,
முதுகலையாசிரியர்(பணிநிறைவு)



சிவமயம்

# முதல் பதிப்பின் முகவுரை

திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம் என்பது திருச்சிற்றம்பல தேசிகரது கலம்பகம் எனப் பொருள் விரித்துக் கொள்ளப்படும். ஆறாம் வேற்றுமைத் தொகை. இனி, திருச்சிற்றம்பல தேசிகரைப் பற்றிய கலம்பகம் எனப் பொருள் விரித்துக் கொண்டு இரண்டாம் வேற்றுமையுருபும், பொருளும் உடன் தொக்க தொகையாகவும்கொள்ளலாம். திருச்சிற்றம்பல தேசிகர், திருக்கயிலாய பரம்பரைத் திருநந்திமரபு மெய்கண்ட சந்தானத்து வழிவழி வந்த திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளுக்குப் பின் பன்னிரண்டாவது குருமஹா சன்னிதானமாக எழுந்தருளியிருந்தவர்கள். இத் தேசிக மூர்த்திகள் எப்பொழுதும் சிவாகம ஆராய்ச்சியையே தமக்குப் பொழுதுபோக்காகக் கொண்டவர்கள். சிவஞானமும், தவவொழுக்கமும் மிக்கவர்கள். இவர்கள் சிவாகமத்திலே இரண்டு இலட்சம் கிரந்தம் ஆராய்ந்து அறிந்தவர்கள். இக் கலம்பகம் துறைசைக் கலம்பகம் எனவும் வழங்கப்படும். துறைசை என்பது திருவாவடுதுறை யென்னும் பெயரின் மரூஉ. இதில் காப்பு உட்பட 102 செய்யுட்கள் உள்ளன.

கலம்பகமாவது தமிழ் மொழிக்கு உரியனவாகக் கூறப்படும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இதன்இலக்கணம் பன்னிருபாட்டியல்,

வச்சணந்திமாலை, இலக்கண விளக்கப் பாட்டியல் முதலியவற்றால் விளங்கக் காணலாம்.

இனி, ஒரு போகும், வெண்பாவும், கட்டளைக் கலித்துறையும், முதற்கலியுறுப்பாக முதலிற் கூறி - புயவகுப்பு. மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சிந்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல், என்னும் இப் பதினெட்டுறுப்புக்களும் இயையுமாறு-மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், வஞ்சித்துறை, கலித்தாழிசை, கலிநிலைத் துறை, வஞ்சிவிருத்தம், வஞ்சித்துறை, ஆசிரியத் துறை, வெண்டுறை முதலியவற்றால் இடையிடையே வெண்பாவும், கலித்துறையும் விரவிவர மடக்குடைச் செய்யுளும், வண்ணம், சந்தம் முதலியனவும் பொருந்த அந்தாதித் தொடையால் முற்றுற இறுதியும் முதலும் மண்டலித்துப் பாடுங்கால் நூறும், தொண்ணூற்றைந்தும், தொண்ணூறும் எழுபதும், ஐம்பதும், முப்பதுமாகப் பாடுவதொரு பிரபந்தம் இது.

இதனை இயற்றித் திருச்சிற்றம்பல தேசிகர் திருவடிகட்கு அணிகலமாக அணிந்தவர் சீனிப்புலவர் என்னும் புலவர் பெருமான். இவர் பரம்பரையிலேயே சிறந்த புலவர் குலத்திலே தோன்றியவர். திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளிடத்திலே சிவஞானோபதேசமும், நிருவாண தீட்சையும் பெற்றுச் சிவபூசையை விதிவழாமல் செய்துவந்தவர். திருவாவடுதுறை யாதீனத்திலே மிக ஈடுபாடுடையவர். தமது ஞானாசாரியரைப் பலபடியாக இக் கலம்பகத்திலே

உண்மையாகப் பாராட்டுகிறார். இவர் பரம்பரைச் சைவ வேளாளர் இவரேயன்றி இவருடன் பிறந்தாரும் முன்னோரும் பின்னோரும் இத் திருவாவடுதுறை யாதீனத்திலேயே கல்வி கற்றுச் சிறந்து அறிவொழுக்க முடையவர்களாகத் திகழ்ந்தனர். ஆதீன வித்துவான்களாக இருந்து ஆதீனத்தின் புகழைப் பல்லாற்றாலும் பரவச் செய்தனர்.

சீனிப்புலவருடையதந்தையார் சர்க்கரைப்புலவர் என்பவர். இவர் பாட்டனார் இவ்வாதீனத்திலே எட்டாவது குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்து சிவாநுபூதிச் செல்வர்களாகத் தெய்வீகம் பெற்று விளங்கிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகருடைய காலத்துச் (கி.பி.1625-1638) சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரிடத்துத் தமிழ்க்கல்வியும், சைவ தீட்சையும், சித்தாந்த சாஸ்திரோபதேசமும் பெற்று விளங்கித் திருச்செந்தூர்க்கோவை, வேதாந்த சூடாமணிக்குச் சித்தாந்தவுரை முதலியன இயற்றிப் புகழ் பட வாழ்ந்தவர். இவருக்கு ஆதி நெட்டிமாலைச் சர்க்கரைப் புலவர் என்றும் பெயர். தொண்ணூறு பிராயம்வரை இருந்தவர் இவர். இவருடைய தந்தையார் சாந்தா பிள்ளை என்பவர். பிந்திய சர்க்கரைப் புலவர் மிழலைச் சதகம் இயற்றித் தஞ்சை மகாராஷ்டிர மன்னர் பிரதாப சிங் (1739-1763) காலத்திலே அரங்கேற்றினார். பிந்திய சர்க்கரைப் புலவருக்கு(1) சாந்துப் புலவர் (2) சீனிச்சர்க்கரைப் புலவர் (3) சீனிப்புலவர் (4) முத்து முருகப் புலவர் எனப் புதல்வர் நால்வர் உளர். அவருள் சாந்துப்புலவர் மயூரகிரிக் கோவை பாடியவர். கி.பி. 1801-இல் சிவகங்கையை ஆண்டுவந்த மருதுபாண்டியன்

என்பவர் பகைவர் கையில் சிக்குண்டகாலத்துப் பிரிவாற்றாது வருந்திச் சிறுகம்பை யூராகிய தமது ஊரிலே உயிர் நீத்தார் இவர். மருதுபாண்டியன் காலம் (கி.பி.1780-1801) மயூரகிரிக் கோவை அரங்கேற்றிய காலம் கி.பி.1778-காளயுத்தி-தை 27 ந்தேதி சுக்கிரவார நாள் எனக் கோவை ஏட்டுப் பிரதியிற்கண்டதென்பர். இரண்டாங் குமாரராகிய சீனிச்சர்க்கரைப்புலவர் திருச்செந்தூர்ப் -பரணி, புகையிலை விடுதூது என்னும் பிரபந்தங்களை இயற்றியுள்ளார். மூன்றாங் குமாரராகிய சீனிப் புலவரே இக் கலம்பக நூலாசிரியராவார்.

இனி,

உரைதருவே தாந்தசூ டாமணியுட் பொருளை
யுலகிலுள்ளோ ருணரவுரை செய்கவெனக் கடல்சூழ்
தரையரசன் சேதுபதி யமாத்தியனாந் தாமோ
தரன் கங்கா குலத்திலகன் தகுதிபெறச் சாற்ற
வரையறுத்துச் சித்தாந்தப் பொருட்டிறனுந் தோன்ற
வகுத்தனனற் றுறைசைநமச் சிவாயதே சிகன்றாள்
பரவுசிவக் கொழுந்துநிதி யருள்கல்விக் கடலைப்
பருகுமுகில் சர்க்கரைநற் பாவலவர் கோனே.

என்னும் இவ்வுரைப் பாயிரம் இராமநாதபுரத் -திலிருக்கின்ற நெல்லையப்ப பிள்ளையவர்கள் குமாரர் எம்மோடு கற்றோராகிய சாமிநாத பிள்ளையவர்கள் பாடியது என வேதாந்த சூடாமணியுரை யேட்டிற் காணப்படுவதென்பர்.

இனி, வேதாந்த சூடாமணியுரைக்குப் பாயிரம் இயற்றிய சாமிநாத பிள்ளை என்னும் சாமிநாத கவிராயர் திராவிட மாபாடிய கர்த்தராகிய ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளுடைய மாணவர்களுள் ஒருவராகிய இராமநாதபுரம்

சமஸ்தான வித்துவான்கள். இவர்கள் தந்தையார் முற்கூறிய நெல்லையப்ப பிள்ளை என்பவர்.

இக் குருமூர்த்திகளுடைய சீடராகிய ஸ்ரீ சுந்தரலிங்க முனிவர் என்பவர் 2080 செய்யுட்கள் உள்ள ஆதி கைலாச மான்மியம் என்னும் திருப்பெருந்துறைப் புராணத்தை இயற்றியருளினார். இவ்வாதீனத்து 10-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ முன்வேலப்ப தேசிகருடைய சீடராகிய ஸ்ரீ சாஸ்திரம் சாமிநாத முனிவர் 2600 செய்யுட்களில் திருவாவடுதுறைப் புராணத்தை இயற்றி இவ்வாசிரியர் திருமுன்பு அரங்கேற்றினார். இம் முனிவரே தஞ்சையை யாண்ட துளஜேந்திர மகாராஜா (1763-1787) விருப்பப்படி 1270 செய்யுட்களிலமைந்த திருப்பெருந்துறைப் புராணத்தை இயற்றினார். மேற்படி தலத்துக்கு ஒரு கலம்பகமும் இவர் அருளினார் என்பது அப் புராணச் சிறப்புப்பாயிரத்தால் தெரிகிறது. அது கிடைக்கவில்லை.

இனி, ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் மாணவர் பன்னிருவரில் இலக்கணம்-ஸ்ரீ சிதம்பரநாத முனிவர். இக்குரு மகா சந்நிதானத்தினிடத்திலே சிவஞானோபதேசமும் சைவ சந்நியாசமும் பெற்றுக்கொண்டார். மற்றொரு மாணவர் இராமநாதபுரம் ஸ்ரீசோமசுந்தர குருவும்-இக் குரவரி -டத்திலேதான் நிருவாண தீட்சையும், சிவஞானோபதேசமும் பெற்றனர். ஸ்ரீமாதவச் சிவஞானசுவாமிகள், ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனாரருளிச் செய்த சிவஞான போதத்துக்கு திராவிட மாபாடியம் அருளிச் செய்து தமது ஆசிரிய மூர்த்திகளாகிய 11-ஆவது ஸ்ரீ பின்வேலப்ப தேசிகர் பெரிய பட்டத்திலும், 12-ஆவது திருச்சிற்றம்பல தேசிகர் சின்னப்பட்டத்திலும் எழுந்தருளியிருந்த காலத்திலே அவ்விரு குருமூர்த்திகள் திருமுன்பு கூடியிருந்த வித்துவ மகாசபையிலே

அரங்கேற்றியருளினார்கள். ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளுடைய முதல் மாணவராக வீற்றிருந்தருளிய கவிராக்ஷஸ-ஸ்ரீ கச்சியப்ப முனிவர். மதுரகவி-தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் ஆகிய இவ்விருவரும் திருச்சிற்றம்பல தேசிகர் பெரிய பட்டத்தில் எழுந்தருளியிருந்து சிவாகம ஆராய்ச்சியையே பொழுதுபோக்காகக் கொண்டு சிவானந்த நிட்டையிலிருந்த காலத்து அவருடைய கட்டளையின்படி அப்போது சின்னப்பட்டத்திலே எழுந்தருளியுள்ள ஸ்ரீ அம்பலவாண தேசிகரிடத்திலே சிவஞானோபதேசமும் சைவ சந்நியாசமும் பெற்றனர். தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் திருச்சிற்றம்பல தேசிகர் மீது சிந்து பாடியுள்ளார்.

இனி, ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ் அருளிச்செய்து அரங்கேற்றிய காலம் கி.பி.1772, ஸ்ரீ சுவாமிகள் சிவபரிபூரணமுற்றது கி.பி.1785. விசுவாவசு-சித்திரை-ஆயிலியம் நாள். ஸ்ரீ கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவரர் சிவபரிபூரணமுற்றகாலம் கி.பி.1790 சாதாரண-- சித்திரை-புனர்பூச நடசத்திரம், மதுரகவி - தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணிய முனிவர் ஆவினன் குடிப்பதிற்றுப் பதந்தாதித் அரங்கேற்றிய காலம் 1789 - கீலக வருடம் தை மாதம் ஆகும்.

இனி, இத்திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் தென்னாட்டு யாத்திரை செய்த காலத்து இராமேச்சுரம் சென்று தரிசித்து இராமநாதபுரத்திலே வந்து எழுந்தருளியிருந்தார்கள். அப்போது இராமநாதபுரம் சமஸ்தானத்திலே கௌரவம் பொருந்திய மகாராஜராஜஸ்ரீ சேதுபதியரசருக்கு மதிமந்திரி யாகவுள்ள ஒருவர் நமது ஆதீனத்துச் சீடவர்க்கத்தினர். அவர் ஸ்ரீ மகாசந்நிதானம் சேதுநாட்டில் எழுந்தருளியிருக்கும் இச்செய்தியை மஹாராஜாவுக்குத் தெரிவித்தார். அப்போது மகாராஜா அவர்கள் "உம்முடைய ஆசிரியராகிய மகாசந்நிதானம் இங்கெழுந்தருளியிருப்பது நல்லதே.

ஆயினும் பல ஆண்டுகளாக மழையின்றி இந்நாடு வற்கடத்தால் வாடுவதைத் தவிர்க்க முடியுமாயின் நாம் திருவாவடுதுறையாதீனத்துக்குக் கொத்தடிமை குல அடிமையாவோம் என, இதனைச்சமயமறிந்து சன்னிதானத்தில் விண்ணப்பிக்க" என அமைச்சருக்கு அறிவுறுத்தினார். மேலும், அமைச்சருடன் அரசரும் காணிக்கைப்பொருள்களுடன் குருமகாசந்நிதானத்தைத் தரிசிக்க எழுந்தருளினார். மஹா சந்நிதானத்துடன் மஹாராஜா அவர்கள் அளவளாவியிருக்கும்போது மதியமைச்சர் மன்னருடைய மனக்குறையை விண்ணப்பித்தனர். குருமூர்த்திகள் மதியமைச்சருடைய வேண்டுகோளைத் திருவுளத்துக்கொண்டு அரசரைப் பார்த்து அவ்வாறே, ஸ்ரீஞானமா நடராசர் திருவருள் செய்வார் என அருளினார். உடனே அரசர் ஆணைப்படி விசேட அபிஷேக ஆராதனைகளுக்குரிய பொருள்கள் சேகரிக்கப்பட்டன. நமது ஞானதேசிகர் ஞானமா நடராச மூர்த்திக்குச் சிறப்பாகப்பூஜை செய்து முடித்துத் தேவாரத் திருப்பதிகங்களில் மேகராகக் குறிஞ்சிப் பண்களைப் பாடப்பணித்துத் தாம் பஞ்சாக்கர செபத்துடன் சிவானந்த நிட்டையில் நெடுநேரம் இருந்து விட்டனர். மேகங்கள் நல்ல மழை பொழிந்தன. மன்னர் பிரான் மகிழ்ந்து ஆசாரியரைத் தரிசித்து வணங்கி மாகேசுரபூஜை சிறப்புற நடத்திச் சபாபதி பூஜையின் பொருட்டும், குருபூஜை மாகேசுர பூஜைகளின் பொருட்டும் சர்வமானிய கிராமங்கள் விட்டுக் கொடுத்துச் செப்புப் பட்டயங்களும் தந்தனர். இதனையே இப்புலவர் பிரான் 'தாயே அருட்கடலே' எனப் (98 செ.) பாராட்டுகின்றனர்.

இனி, திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் சேதுவேந்தர் வேண்டுகோளுக்கிணங்கிச் சிவானந்த நிட்டையிலிருக்கும் போது சொல்லிய பாடல் வருமாறு

வெண்பா

"சைவ சமயஞ் சமயமெனின் அச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமெனின் - ஐவரைவென்(று)
ஆனந்த இன்பில் அழுந்துவது முத்தியெனின்
வானங்காள் பெய்ம்மின் மழை" என்பது.

மழை பெய்து தம்நாடு வளம் பெற்றதற்கு உவந்து பொற்கோட்டை என்னும் ஊரைச் சேதுவேந்தர் இத்திருவாவடுதுறை ஆதீன மடத்துக்கு முற்றூட்டாக அளித்தபோது ஞானதேசிகர் மகிழ்ந்து சொல்லிய பாட்டு இது.

வெண்பா

"நதியாம் விரிசிலை நன்னகர்பொற்கோட்டை
பதியாந் துறைசைப் பதிக்கு - விதியாகத்
தானமிட்டான் சேதுபதி தாரணிதா னுள்ளளவும்
ஊனமிலை யெந்தநா ளும்." என்பது,

இதனைக் கருதியே இவ்வாதீனத்தில் 'சேதுபதியன்னமும் காவிரிநீரும் ஆவுடையப்பர் நீழலும்' எனக்கூறும் பழமொழி யெழுந்தது. இப்பாடல்கள் இரண்டையும் இராமநாதபுரம் வித்வான், உ.ப.வே.மு.இராகவையங்கார் ஸ்வாமிகள் தாம் தொகுத்துதவிய 'பெருந்தொகை' நூலிலே குறிப்பிட்டிருத்தலுங் கருதத்தக்கது.

இனி, பவானிகூடற் புராண ஆசிரியர் வாசுதேவ முதலியார் குருவணக்கங் கூறுமிடத்து இந்த ஞான தேசிகருக்கு வணக்கம் கூறியிருத்தலால் அவரும் இவருடைய மாணவர்களுள் ஒருவரெனக்கருதப்படுகிறது.

இவ்வாதீனத்து வழக்க வொழுக்க விழுப்பங்-களையும், சம்பிரதாயங்களையும் இக்கலம்பக முகமாக இப்புலவர் பிரான் அங்கங்கே எடுத்துப் பாராட்டுகின்றார். தமக்கு வித்தியாகுருவும் ஞானாசிரியராகவும் உள்ள திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளுடைய உண்மையான இயல்புகளனைத்தையும் இடந் தொறும் கூறித் தம் நாவிலுள்ள தினவைத் தீர்க்கக் கருதுகின்றார். அத்தினவு தீர்ந்ததாக ஒருவாற்றானும் புலப்படவில்லை. ஞானதேசிகருடைய தவத்தைக் கூறவந்தவர்,

"அறத்தின் தேவதுவாந் திருச்சிற்றம் பலவர்" *(8)*
"சீர்த்தவ வடிவாயுதித்த திருச்சிற்றம்பலவன்" *(11)*
"மோன தவனே" *(35)*
"திருச்சிற்றம்பல குருவே தவத்தர் கோவே" *(39)*
"தவ மெல்லா மண்டுபுகழ்த் திருச்சிற்றம் பலர்" *(66)*
"தவ வடிவே" *(67)*

"பெருகு தவந்தீராமை யாற்று திருச்சிற்றம்பலவர்" *(84)* என்று புகழ்கின்றார். இவருடைய துறவு நிலையையும், ஐம்புலவொடுக்கத்தையும் "திருச்சிற்றம்பல வெதி" *(53)* "துறைசைச்சைவ துல்லியர் எதிராசர்" *(54)* "தாரணி யெங்கும் பணி யெதிராசர்" *(60)* "சீலத்தால் ஒருவரை" *(72)* "ஐம்படைப்புன் காமனை வென்றடர்த்து ஞானப் பொருள் படைக்குந் துறைசை வரு திருச்சிற்றம் பல குரவன்" *(69)* எனப்பாராட்டிச் சொல்வர்.

தமதாசிரியர் சிவாகம ஆராய்ச்சி பெரிது முடையவர், கல்வி நல மிக்கவர், தருக்கநூற்புலவர், மெய்கண்டசாஸ்திர நிபுணர், தேவார முதலிய திருமுறை வல்லுநர் எனக்கலம்பக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். "சைவக்கலைதாங்கு கல்வி நல முடையவர்" (25) பேசுவது மெய்காணப் பெற்ற சைவ நன்னூலே" (51) "தவத்திற்கிங் கொருவன் தருக்கிக்குங்கலைஞன்" (40) மதி தருங்கலை யெழுத்துத்தங்கிதழ் வாய விழ்ந்திட முறைபயின்றன" (12) "திருச்சிற்றம்பலவர் சைவாகமத் தையர்" (60) என்பன அவை.

இனி, ஞானாசிரியர் சிவோகம் பாவனையுடன் திருக்கரத்தைச் சீடன் சிரத்தில் வைத்துப் பாசமுற்றுங் கெடப்பண்ணல் (12) உடல் பொருள் ஆவியை ஆசிரியர் ஏன்று கொள்ளல் (42) உபதேசம் (62) குருவருளை மிகச் செய்வன இவை (5) குருவை எப்போதும் வணங்குவோர் பெறும் பேறு (15) மானைக் காட்டி மானைப்பிடிக்கும் வேடரியல்பு (34) சிவபிரானும் ஸ்ரீ மெய்கண்ட தேவரும் தமதாசிரியராகிய திருச்சிற்றம்பலவரே (35) இடப -வாகனத்தையே சிவிகையாகக் கொண்டு சிவபிரான் திருச்சிற்றம்பல தேசிகராக வுருக்கொண்டமை (70) கருட தியானத்தால் நஞ்சின்வலி கெடுவது போலச் சிவோகம் பாவனையால் மலவலி கெடல் (83) சிவஞானோ -பதேசப்பேறு (45) யாமேபிர்ம மென்பவர் பசுஞான முடையவர் (63) உபதேசத்தினாலுளவாகும் பெருமை (71) முதலிய சைவ சம்பிரதாயங்களை விளக்குகிறார். மாகேசுரபூசை இயல்பு, அன்னக்கொடியேற்றி

வந்தோருக்கெல்லாம் அன்னமளித்தல் (16) ஞானமாநடராசபூசை (76) சபாபதி பூசை (50) பூசையிலோதுத் தேவாரம் (57) கைத்தாளவோசை (52) அரகரமுழக்கம் (49) வைத்தியநாதர் ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியருடைய பூசையி லுள்ளவர் (76) அடியார்க்காவன (82) இருவினைக் கீடாகவே யாக்கை கிடைத்தல் (70) மனம் அருவமானது (85) கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதிசிவம் பூசித்த சபாபதியே ஞானமாநடராசர் (86) இனிப்பிறப்பும் வேண்டப்படும் (87) சித்தபுருடர் ஓசை நித்தலுங் கேட்டல் பந்தியிலுணவு (90), சேகண்டி நாதம் (91), (94) சேகண்டியோசை, சங்கமுழக்கம், கைத்தாளம், ஐந்துகொத்து மணியோசை, தேவாரப் பண் இவைகளின் இயல்பு (99) நமன் முதலியோரியல்புகள் (71, 69, 58) கற்றதனாற் பயன் (77) நாடோறும் மடத்தில் எல்லோரையும் அழைத்தமுதருத்தல் (70) திருநீறளித்தல் (82) குரு மிச்சி லுண்டல் (41) தேவார மோதுவார் மரபு (39) பாத காணிக்கை குருவுக்குச் செலுத்துதல் (98) திருமால் பிரமன், இந்திரன் முதலியோர் வாழ்வு கனவே என்பதும் சிவபோக நுகர்வும் (87) அடியார் கூட்டத்தில் கூட்டினமை (97, 101) புலவருக் கறிவுறுத்தல் (14,80) முதலிய செய்திகள் அறிந்து இன்புறத் தக்கன. தலைவிருப்புரைத்தல் (33), கிள்ளைவிடு தூது 36. இரங்கல் (37), வேழம் வினாதல் - (44) முதலியன அகப்பொருட் செய்திகள்.

மடக்கணி யுடையன (7, 30, 32, 37, 61, 72-ஆம் பாடல்கள். கலம்பகங்களில் கூறப்படாத பாம்பு என்ற உறுப்பு இதன்கண் வந்துள்ளது. சிலஉவமைகள் வருமாறு - ஆற்று வெள்ளத் தங்கணநீர் (97), வயல்பாயுந் தண்புனல் புல்லுக்கும் பாய்தல் (101), கானிற்றுரும்பு (62), மானைக்காட்டி மானைப் பிடித்தல் (34) முதலியன.

இனி திருவாவடுதுறை யென்பதைக் கோமுத்திபுரம் பெற்ற முத்திப்பதி, தேனு முத்திபெறு புரம் பரியாயப் பெயராக அமைத்துள்ளார் இவர். தேவார இசைகற்கத் தும்புரு நாரதர் வருதல், விண்ணோரும் மானிடராகவர எண்ணுதல், நாகரும் போற்றுதல், திருவடியே கயிலாயம் சர்வமானியம், அடியாரை அமரரும் சேவித்தல் முதலிய சில செய்திகளும் இன்புறற் பாலனவே. குரு திருமேனிக்காட்சிச் சிறப்புக் கூறுவது74-ஆம் செய்யுள் வெள்ளித் தேர் கைலாயக்காட்சியை யொப்பச் செய்து தந்த முத்துக்குமர பிள்ளை என்பவர் சேதுபதி மதியமைச்சர். அத்தேர் அக்காலத்து ஆறாயிரம் ரூபா செலவிலமைத்தது. இக்குறிப்பு மதுரைத் தமிழ்ச் சங்க செந்தமிழ்ப் பத்திரிகை தொகுதி - 21. பக்கம் 200-ல் காண்க. இக்குறிப்பை எழுதியுபகரித்தவர் திருவாவடுதுறையாதீன வித்துவானும், மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் சைவ நூற் பரிசோதகரும் ஆகிய ஸ்ரீ சே.ரா. சுப்பிரமணியக் கவிராயராவார்கள், இக்கவிராயரவர்களும் இவர் சகோதரர்களும் இவ்வாதீனத்துச் சின்னப்பட்டம் ஸ்ரீ நமச்சிவாய தேசிகரிடத்துக் கல்வி பயின்றவர்கள் சேற்றூர் சமஸ்தான வித்வான்கள். கருவிலே திருவுடைய கவிவாணர்கள்.

"இனி தாரணிமேற் றிவநிலை மாறிமற் றெங்கெழுந் தாலென்ன செங்கதிரே" என்னும் இக்கலம்பகப் பாட்ற் பகுதி "எங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்" என்னும் தேவாரப் பகுதியையும் நினைவிற்குக் கொண்டு வருகிறது.

இக் கலம்பக நூல் எனக்குக் கிடைக்கச் செய்த திருவருளை எண்ணுந் தொறும் என் மனம் இடையறா துருகும். பெருவியப்பை உண்டுபண்ணும். யான் மயூரகிரிக் கோவையைப் பாடங் கேட்டகாலத்து அக்கோவையின் முகவுரைப் பகுதியானும், ஸ்ரீமத் உப.வே. ரா.இராகவைய் யங்கார் ஸ்வாமிகள் எழுதியுள்ள சேதுநாடுந் தமிழும் என்ற வசனநூலானும் துறைசைக் கலம்பகத்தைப் பற்றிய செய்தியறிந்து கொள்ள நேர்ந்தேன். பின்பு என் தமிழாசிரியரும், திருவாவடுதுறை யாதீன வித்துவானும் ஆகிய ஸ்ரீ .சு.பொன்னோதுவா மூர்த்திகளிடத்து இந்நூலைப் பற்றிக்கேட்ட போதும் தெரிந்து கொள்ளக் கூடவில்லை. மற்றும் பல இடங்களில் விசாரித்து வரலானேன். எனக்கு முன்பு இவ்வாதீன வித்வானாகவிருந்த ஸ்ரீ.வி.சிதம்பரராமலிங்கம் பிள்ளையவர்களிடத்தும் இந்நூல் விஷயமாக உசாவினேன். ஒன்றும் புலனாகவில்லை ஸ்ரீ-லஸ்ரீ குருமஹா சந்நிதானம் எளியேன் மேலுங் கருணைகூர்ந்து நாயினுக்குத் தவிசிட்டாற் போல இவ்வாதீன கைங்கரியத்தை ஒன்றுக்கும் பற்றாத என்னைச் செய்துவரப் பணித்தருளிய கட்டளையைச் சிரமேற்கொண்டு ஆதீன நூல் நிலயத்தை ஒழுங்கு படுத்தி

ஆராய்ந்த காலத்திலே கண்ணுங் கருத்துமாக இக்கலம்பகத்தைத் தேடியும் காணேன். மிகக் கவன்றேன் திருமாளிகைத் தேவரிடத்தும், ஸ்ரீ பஞ்சாக்கர பராமாசாரிய மூர்த்திகளிடத்தும் விண்ணப்பித்து வந்தேன். எளியேன் வேறென்ன செய்ய வல்லேன்.

ஒருநாள் வழக்கம்போலச் சென்று ஸ்ரீ ஞானமாநடராசர் பூசையும் குருமூர்த்தமுந் தரிசித்து ஒடுக்கத்திலே போய் விபூதி பிரசாதம் பெற்று மாகேசுரபூசையும் நடந்தேறியவுடன் ஸ்ரீ - லஸ்ரீ மஹா சந்நிதானம் ஏழையேனை அழைத்தருளியது. அடியேன் சந்நிதானத்தை வணங்கி யெழுந்து விபூதி பெற்றுக் கொண்டேன். அப்போது ஒரு காகிதப்பிரதியைத் தமது திருக்கரத்தா லெடுத்து அனுக்கிரகம் செய்து அடியேனிடம் கொடுத்தருளியது. நெடுங்காலமாக வேண்டியிருந்த திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகமாக இருந்ததுஅப்பிரதி. உடனே எல்லையில்லா ஆனந்தங்கொண்டு பலமுறை விழுந்து விழுந்து பணிந்தெழுந்தேன். வேறொன்று தோன்றாதவனானேன். கண்ணீர் மாறாது பெருகியது. பேச நாவெழவில்லை. தேம்பித் தேம்பித் திகைத்தேன். பிரித்த காலத்துத் தோன்றிய பாடலைப் படித்துப் பொருளையுணர்ந்து மகிழ்வடைந்தேன் எல்லாம் சிவச்செயல். குருவருள். அப்பாடல் வருமாறு.

"இடரேது மினியில்லைப் புள்ளிருக்கு வேளூரி
லென்றுங் கோது
படராத துறைசைநமச் சிவாயருக்கு முன்னின்ற
பரமர் தம்மை
நடராச ரொடுபூசை திருச்சிற்றம் பலவர்செயு
நாளி லோர்நாள்

*விடரேனுந் தவரேனுந் தரிசித்தால் வினைகளெல்லாம்*
*வீடுந்தானே."* (76 செய்யுள்) என்பது

இனி, ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் அருளிச் செய்த

*"வேண்டத் தக்க தறிவோய் நீ வேண்ட முழுதுந்*
*தருவோய் நீ,*
*வேண்டும் அயன்மாற் கரியோய்நீ வேண்டியென்னைப்*
*பணிகொண்டாய்,*
*வேண்டி நீயா தருள்செய்தாய் யானு மதுவே*
*வேண்டினல்லால்,*
*வேண்டும் பரிசொன் றுண்டென்னி லதுவு முன்றன் விருப்பன்றே"*

என்னும் அருமைத் திருவாசகம் என் நினைவிலிருந்து ஊக்கிவிட்டு ஆதீனப் பணிகளைச் செய்விக்கின்றது. அதன் பின் இக்கலம்பகத்தை ஆராய்ந்து படித்து இயன்ற வரை ஒரு குறிப்புரையும் எழுதிச் சேர்த்துள்ளேன் இக்கலம்பகத்தைச் சித்திரை மாதத்திலேயே அச்சிடத் தொடங்கியும் இடையிடையே நேர்ந்த சிலபல அலுவல்களாலும், 26 -ஆவது வெளியீடாகிய இக்கலம்பகம் அச்சிடுவதற்கு முன்னமே சித்திரை ஆயிலியநாளில் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகளருளிச் செய்த 'அத்துவித வாக்கியத் தெளிவுரை'யை (27ஆவது வெளியீடு) அச்சிட்டு வழங்க வேண்டியிருந்தமையாலும், இவ்வாதீனத்து எட்டாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அருளிச்செய்த திருஞானசம்பந்தர் பிள்ளைத் தமிழைப் பலஏட்டுப் பிரதிகள் வைத்துப் பரிசோதிக்க வேண்டியிருந் தமையாலும் திருவாவடுதுறை யகம அந்தாதிக்குப் பதவுரை யொன்றெழுதி வந்தமையாலும் திருவா வடுதுறைப் புராணம் திருவீழிமிழலைப் புராணங்களை அச்சிடச் சித்தம் செய்து வந்தமையாலும் காலந்தாழ்ந்தது.

இனி, இப்பொழுது இவ்வாதீனத்திலே இருபதாவது குருமஹா சந்நிதானமாக வெழுந்தருளியிருந்து குருக்ஷேத்திர பரிபாலனம்,. சிவக்ஷேத்திர பரிபாலனம் முதலிய பலவற்றையும் இவ்வாதீன சம்பிரதாயங்களுக்கு விரோதமின்றிச் செய்துவருதோடு உலகோப காரமான பல தர்மங்களையும் மக்களுக்கு இன்றியமையாமை யறிந்து செய்வித்து மக்கள் மனத்திலெழும் பெருமகிழ்ச்சியை யறிந்து திருவுள மகிழும் பெருங் கொடைவள்ளலாகிய ஸ்ரீ - ல ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் கட்டளையிட் டருளியபடி இதனைப் பரிசோதித்து என் சிற்றறிவுக்கு எட்டிய அளவிலெழுதிச் சேர்த்த குறிப்புரையுடன் இப்பொழுது வெளிப்படுத்தியுள்ளேன். குணங்கொண்டு கோதாட்டுதல் அறிஞர் கடன்.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநுவாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ."

ஸ்ரீ மாதச் சிவஞான யோகிகள்.

திருவாவடுதுறை
10.9.1949

**த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,**
ஆதீன வித்துவான்.

# தலச் சிறப்பு :

அவனி போற்றும் அரும்பாக்கம் நன்னகர் வரலாற்றுச் சிறப்புக் கொண்டது. அரும்பாக்கம் நன்னகரில் அருளாளர்களும் அருந்தமிழ் வல்லார்களும் வாழ்ந்து சிறந்துள்ளனர்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் 12ஆவது குருமகா சன்னிதானமாக எழுந்தருளியிருந்த அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளின் அவதாரத்தலம் அரும்பாக்கம் ஆகும். இவர்கள் அருட் சிறப்பு மிக்கவர்கள். அற்புதங்கள் நிகழ்த்தியவர்கள்.

அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் தலயாத்திரையாக இராமநாதபுரம் மாவட்டத்திற்கு எழுந்தருளினார்கள். அப்போது இராமநாதபுரம் மாவட்டத்தில் மழையின்மையால் வறுமையும், பஞ்சமும் நிலவின. இராமநாதபுரம் சேதுபதி மன்னன் அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளை வணங்கி இங்கு மழை பெய்ய அருளவேண்டும் என்று விண்ணப்பித்தார். சேதுபதி மன்னனின் வேண்டுகோளைத் திருச்செவிமடுத்த அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் ஓதுவா மூர்த்திகளை அழைத்து மேகராகக் குறிஞ்சிப்பண்ணில் அமைந்த தேவாரப் பதிகங்களை ஓத அருளாணை வழங்கினார்கள். பின் ஆன்மார்த்த மூர்த்தியாகிய அருள்மிகு ஞானமா நடராசப் பெருமானுக்குப் பூசையும் சிறப்பு வழிபாடுகளும் செய்து பஞ்சாக்கர செபத்துடன் நிட்டையில் இருந்தார்கள் நிட்டையின் நிறைவில்,

*சைவம் சமயம் சமயமெனில் அச்சமயத்*
*தெய்வம் பிறைசூடும் தெய்வமெனின் - ஐவரைவென்*
*றானந்த இன்பில் அழுந் துவது முத்தியெனின்*
*வானங்காள் பெய்ம்மின் மழை.*

என்று மழை பெய்யப் பாடியருளினார்கள். மழை பொழிந்து வறட்சி நீங்கியது. இராமநாதபுரம் மாவட்டத்தில் மகிழ்ச்சி பொங்கியது. மன்னனும் மகிழ்ந்தார்.

சேதுபதி மன்னன் மகிழ்ந்து, திருப்பொற் -கோட்டை என்னும் ஊரை அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளுக்குத் தானமாகச் சமர்ப்பித்தார். இக்கிராமத்தில் அருள்மிகு விநாயகர் திருக்கோயிலும், அருள்மிகு நடராசப்பெருமான் பூசைமடமும் உள்ளன. இதில் நாள்தோறும் பூசையும், அன்னதானமும் நடைபெற்று வருகிறது.

காசியில் கண்ணப்ப சாமி மடம் என்னும் கிளைமடம் இவர்கள் காலத்தில் உண்டாயிற்று. இவர்கள் காலத்தில் ஆதீனமடாலயத்தின் ஆன்மார்த்த மூர்த்தியாக விளங்கும் ஞானமா நடராசப் பெருமானுக்கு முன்னமே உள்ள நிலையிலிருந்து மாற்றி வெள்ளித்தேர் வடிவப் பேழை புதிதாகச் செய்யப் பெற்றது. (இவ்வாதீன 20ஆவது குருமகா சன்னிதானம் அருளாட்சியில் மீண்டும் வெள்ளித்தேர் வடிவப்பேழை புதிதாகச் செய்யப்பெற்றது சிறப்புக்குரியது.)

அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளின் ஆதீன அருளாட்சிக் காலம் கி.பி. 1730 - கி.பி 1770 வரையாகும். இவர்களுடைய சிறப்புகளைச் சீனிப்புலவர்

இயற்றிய திருச்சிற்றம்பல தேசிகர்கலம்பகத்துள் விரிவாகக் காணலாம். இத்திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம் குடமுழுக்கு விழா மலராக மலரவுள்ளது.

அரும்பாக்கத்தில் அரும்பாக்கிழார் என்னும் புலவர் வாழ்ந்ததாகக் கூறுவர் பிற்காலத்தில் இத்தலத்தில் புலவர் பெருமக்கள் வாழ்ந்து சிறந்துள்ளனர்.

## சென்னை மாநகருக்கும் திருவாவடுதுறை ஆதீனத்திற்கும் உள்ள தொடர்பு :

திருவாவடுதுறை ஆதீனத்துக் குலதீபமாக விளங்கிய மாதவச் சிவஞானயோகிகளின் தலைமாணா-க்கராய்த் திகழ்ந்தவர் அருள்திரு கவிராட்சச கச்சியப்ப முனிவர் ஆவார். கச்சியப்ப முனிவர் சென்னையில் சிறிது காலம் வாழ்ந்தார். அப்போது பக்தப் பெருமக்களும், பிரபுக்களும் வேண்டிக் கொண்டதற்கு இணங்க விநாயகபுராணம், சென்னை விநாயகர் பிள்ளைத் தமிழ் ஆகிய நூல்களை இயற்றியருளினார்கள்.

இந்நூல்களைப் பூங்கா நகர் வெங்கடாசல முதலித் தெருவில் உள்ள அருள்மிகு பிரசன்ன விநாயகர் ஆலயத்தில் அரங்கேற்றினார்கள். அப்போது அடியுறையாக இரண்டாயிரம் வராகன் பொன்பெற்றார்கள். அப்பொன்னைக் கொண்டு, திருவாவடுதுறை ஆதீனக் குருமுதல்வர் அருள்திரு நமசிவாய மூர்த்திகள் சன்னதி மண்டபத்தினைத் திருப்பணி செய்து அணிபெறச் செய்வித்தருளினார் என்பது வரலாறாகும்.

திருவாவடுதுறை ஆதீனம் அருள்திரு. தாண்டவராயத் தம்பிரான் சுவாமிகள், 17-ஆவது குருமகாசன்னிதானம் ஆகியோர் சென்னையிலுள்ள கிளை மடத்தில் தங்கி தமிழாய்ந்தனர் என்பது வரலாறு.

பிற்காலத்தில் ஆதீனத்திற்குச் சொந்தமான சென்னை அரும்பாக்கத்தில் உள்ள இடங்கள் தண்ணீர் பாய்ச்சல் இன்றி தரிசு நிலமாக ஆனதால் மக்களுக்குப் பயன்படும் வகையில் மனையாக மாற்றப்பட்டு மக்களுக்கு மனைப் பகுதிக்கு விடப்பட்டுள்ளது. மேலும் திருக்கோயில்கள் கட்டுவதற்கும் ஆதீனத்திற்குச் சொந்தமான இடம் வழங்கப்பெற்றுள்ளது. அரும்பாக்கம் மு.வ.தெருவில் உள்ள அருள்மிகு சித்திவிநாயகர் திருக்கோயில், திருவள்ளுவர் தெருவில் உள்ள அருள்மிகு வலம்புரி விநாயகர் திருக்கோயில் ஆகியவை ஆதீனத்திற்குச் சொந்தமான இடத்தில் அமைந்துள்ளன.

ஜார்ஜ் டவுன் கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் உள்ள ஆதீனத்திற்குச் சொந்தமான இடத்தில் கன்னிகா பரமேஸ்வரி பள்ளிக்குக் கிரயம்பெற்று 19.11.1968ல் 4983 சதுர அடி இடம் கொடுக்கப்பட்டுள்ளது.

திருவொற்றியூரிலுள்ள ஆதீனக் கிளைமடத்தில் திருமுறைகள் பயிற்றுவிக்கப்படுவதுடன் காலைச் சிற்றுண்டியும் வழங்கப்பெறுகிறது.

திருவாவடுதுறை ஆதீனத்தால் சென்னையில் சைவ சித்தாந்தம், திருமுறை நேர்முகப் பயிற்சி மையங்கள் இரண்டும் நடைபெறுகின்றன. மாணவர்கள் எண்ணிக்கை மிகுதியாகக் கொண்டு சிறப்பாக நடந்து வருகிறது.

**உபயம் :**

கோவிந்தப்ப நாயக்கன் தெருவில் உள்ள அருள்மிகு நடராஜர் கோயிலுக்கு ஐந்து வருடத்திற்கு மேலாக நித்திய பூசைக்குரிய தீபம், நைவேத்தியம் முதலியன அளிக்கப்பெறுவதுடன் ஆண்டிற்குரிய ஆறு அபிஷேகமும் ஆதீன உபயமாக செய்யப்பெறுகிறது. சிவாச்சாரியாருக்கு சன்மானமும் வழங்கப்பெற்று வருகிறது. ஆறு அபிஷேக பிரசாதம் ஆதீன மடாலயத்திற்கு எழுந்தருளச் செய்து குருமகாசன்னிதானம் அவர்களிடம் சமர்ப்பிக்கப் பெறுகிறது.

இவ்வாறு அன்று முதல் இன்று வரை சென்னைக்கும் ஆதீனத்திற்கும் நெருங்கியதொடர்பு உள்ளது. சென்னை வாழ்மக்களும், சென்னை ஆன்மீக அமைப்புகளும் ஆதீனத்திற்கு வந்து 23-ஆவது சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்களைத் தெரிசித்து ஆசியும் தீட்சையும் பெறுவதோடு, சென்னைக்கு எழுந்தருளச் செய்து சிறப்பாக வரவேற்று ஆசிபெற்று வருகின்றனர்.

**அருள்மிகு திருச்சிற்றம்பல நாயகி சமேத அருள்மிகு திருச்சிற்றம்பல நாதர் திருக்கோயில்.**

இத்திருக்கோயில் அரும்பாக்கத்தில் அமைந்துள்ளது. வடக்கே பாஞ்சாலியம்மன் திருக்கோயிலும், மேற்கே ஆதிபராசக்தியம்மன் திருக்கோயிலும், வடகிழக்கே துர்க்கையம்மன் திருக்கோயிலும், தென்மேற்கே குருங்காலீஸ்வரர் திருக்கோயிலும், அமைய நடுவே அரும்பாக்கம் 10, சஞ்சீவித் தெருவில் அருள்மிகு திருச்சிற்றம்பல நாயகி உடனாய அருள்திரு திருச்சிற்றம்பலநாதர் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலில் ஈசான்ய திக்கில்

ஆதீனத்திற்குச் சொந்தமான இடத்தில் திருமதி அமராவதி முனிகிருஷ்ண ஐயா அவர்களால் சொர்ணபைரவர் திருக்கோயில் அமைத்து வழிபாடு நடைபெறுகிறது.

இத்திருக்கோயில் 12.05.1997ல் வினை தீர்த்த விநாயகர் திருக்கோயிலாக ஸ்தாபிதம் செய்யப் பெற்றது. இத்திருக்கோயிலில் நூதனமாக துர்க்கா, இலட்சுமி, சரசுவதி பிரதிட்டை செய்யப்பெற்றது சித்தவைத்தியர் திரு.கே.ரவிசங்கர், சித்தவைத்தியர் ஆர்.அஞ்சனாதேவி ஆகியோரால் விக்ரம வருஷம் ஆனிமாதம் 21-ஆம் தேதி (05.07.2000) புதன்கிழமையன்று கும்பாபிஷேகம் நடத்தப்பெற்றது. சர்வசாதகம் கே.முத்துக்குமாரசாமி குருக்கள் ஸ்தபதி மகாபலிபுரம் சண்முகம் என்று இத்திருக்கோயில் கல் வெட்டு குறிப்பிடுகின்றது.

இத்திருக்கோயிலில் நாள்தோறும் ஒருகாலப் பூசை சிறப்பாக நடைபெறுகிறது. தற்பொழுது அருள்மிகு வினைதீர்த்த விநாயகர் திருக்கோயில் சிவாலயமாகத் திகழ்கின்றது.

**கட்டடத் திருப்பணி :**

ஆதீனத்திற்குச் சொந்தமான மனையில் புகழோடு விளங்கிய ஜட்ஜ் பங்களாவின் அனுபவதாரரான திருமிகு. பலராமஐயாவின் பேத்தி திருமதி. சித்ரா அவர்கள் தமது அனுபவ நிலத்தில் அமைந்துள்ள வினை தீர்த்த விநாயகர் திருக்கோயிலுடன் இணைந்துள்ள கட்டடத்தையும் (6 சென்ட் நிலம்) திருவாவடுதுறை ஆதீனம் 23-ஆவது சீர்வளர்சீர் குருமகா சன்னிதானம் அவர்களிடம் சமர்பித்தார்கள். 2008-2009ல் இக்கட்டடத்தில் பூசை அறை மற்றும் பக்த கோடிகள் தங்கும் வகையில் சீரமைத்துப் பணிகள் சிறப்பாக செய்யப்பெற்றுள்ளன.

# குடமுழுக்கு விழா :

விநாயகர் ஆலயமாகத் திகழ்ந்து வரும் இவ்வாலயத்தை ஆதீனத்து 23-ஆவது சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்கள் சிவாலயமாக மாற்ற திருவுளம் பற்றினார்கள். அவர்கள் காசியாத்திரைக்கு எழுந்தருளிய போது நர்மதை நதிக்கரையிலிருந்து தேர்ந்தெடுத்துக் கொண்டுவந்த பாணலிங்கத்தையும் அதனுடன் அம்பிகை திருமேனியையும் பிரதிட்டை செய்ய திருவுள்ளம் பற்றினார்கள். அவ்வண்ணமே, பிரதிட்டை செய்யவுள்ளது. இங்கு எழுந்தருளியுள்ள இலிங்கத்திற்குத் திருச்சிற்றம்பலநாதர் என்றும் அம்பிகைக்கு திருச்சிற்றம்பல நாயகி என்றும் திருநாமம் சூட்டப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் திருவருளும் அரும்பாக்கத்தில் அவதரித்த அருள்திரு திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகளின் குருவருளும் ஒன்றாய் அமைந்த சிறப்பேயாகும் என்பதில் ஐயமில்லை.

இத்திருக்கோயிலைச் சைவம் புரக்கும் தாளாளர் சென்னை சிவத்திரு. எம்.வி. ஜெய்சங்கர் பி.இ., அவர்கள் சிவபுண்ணியங்களில் மேலானதாகக் கருதப்பெறும் திருப்பணியை சீர்வளர்சீர் குருமகாசன்னிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண்ணம் செவ்வனே நிறைவேற்றியுள்ளார்.

இத்திருக்கோயில் நிகழும் விக்ருதி ஆண்டு மாசி மாதம் 4ஆம் நாள் (16.02.2011) புதன்கிழமை காலை 6மணிக்குமேல் 7.30மணிக்குள் ஆயுஷ்மான் யோகம்

கரணம் தைதுலம் நேத்ரம் 2ஜீவன் 1 புனர் பூச நட்சத்திரம் திரியோதசி திதி சித்த யோகம் கும்ப லக்னம் கூடிய சுபயோக சுபதினத்தில்

திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனம்23-ஆவது குருமகாசன்னிதானம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருமுன்னர் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா நடைபெற உள்ளது.

# யாகசாலை நிகழ்ச்சிநிரல்

**விக்ருதி வருஷம் மாசி-2 திங்கள் (14.02.2011)**

காலை 9 மணிக்கு கணபதிஹோமம் மாலை 6 மணிக்கு நவக்கிரக ஹோமம், லட்சுமி பூஜை, வாஸ்து சாந்தி, பிரவேச பலி, தீர்த்த சங்கிரகணம், பிரசன்னாபிஷேகம், யாகசாலை கலச ஸ்தாபிதம், அங்குரார் பணம், ஆச்சாரியர் ரட்சா பந்தனம், கும்பாலங்காரம். கலாகர்ஷணம், யாகசாலை பிரவேசம். இரவு 9 மணி முதல்கால யாக பூஜை, பூர்ணாகுதி தீபாராதனை, அருட்பிரசாதம் வழங்குதல்.

**விக்ருதி வருஷம் மாசி-3 செவ்வாய் (15.02.2011)**

காலை 8.00 - 11.30 இரண்டாம்காலயாகபூஜை ஆரம்பம், பூர்ணாகுதி, தீபாராதனை, அருட்பிரசாதம் வழங்குதல். மாலை6.00-9.00 மூன்றாம் கால யாகபூஜை ஆரம்பம், பூர்ணாகுதி தீபாராதனை, அருட்பிரசாதம் வழங்குதல்.

**விக்ருதி வருஷம் மாசி-4 புதன் (16.02.2011)**

புதன் காலை 5 மணிக்கு நான்காம் கால யாகபூஜை ஆரம்பம், பூர்ணாகுதி, தீபாராதனை, யாத்ரா தானம், கிரகப் பிரீதி, கடம்புறப்பாடு. காலை 6.00 - 7.30 மஹா கும்பாபிஷேகம் மூலவர் அபிடேகம், தீபாராதனை, அருட்பிரசாதம் வழங்குதல். பகல் மகா அபிடேகம்.

**சர்வசாதகம் : சித்தாந்த ரத்தினம் ஆகமவிசாரதா**
**சிவ ஸ்ரீ கை. தண்டபாணி சிவாச்சாரியார்**

அருள்மிகு மகாலிங்கப் பெருமான் திருக்கோயில்,
திருவிடைமருதூர் ஆலய அர்ச்சகர் : மணிகண்ட
குருக்கள்.

---

| | | | |
|---|---|---|---|
| குரு | | | கேது சந்திரன் |
| ல / புத - சூரி செவ் | இராசி | | |
| | | | |
| இராகு சுக்கிரன் | | | சனி |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# துறைசைத்
# திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம்

## சிவப்பிரகாச விநாயகர் காப்பு.

### நேரிசை வெண்பா

*சிறையகற்றி யாண்டதிருச் சிற்றம் பலவர்*
*துறைசைக் கலம்பகத்தைச் சொல்லக் - குறைதீர்*
*சிவப்பிரகா சற்றமலர்ச் சேவடிக்கென் றோதுஞ்*
*சிவப்பிரகா சப்பெயர்த்தந் தி.*

*அரும்பதவுரை :*

*சிறையகற்றி - தேகச் சிறையை நீக்கி, காசு அற்ற மலர்ச்சேவடிக்குச் சிவப்பு இர என்று ஓதும் தந்தி - குற்றமற்ற செந்தாமரை மலர் போலுஞ் சிவந்த திருவடி நிறத்திற்குச் சிவப்புநிறம் இருளேயென்று கூறப்படும் விநாயகர் என்க. இவ்வாறே "முறுக்கிதழ் கறுக்குமெய்*

"குறியதன் கீழாக்குறுகலும்" என்னும் விதி பற்றி "நிலவிரிகானல்" என்புழிப் போல இரளனக் குறுகிற்று. குறை - இடையூறு: அறிவுக்குறைவும் ஆம். அறியாமையாகிய குற்றமென்றலுமொன்று. தந்தியென விளித்துக் குறைதீர் என முற்றுவினைப் பயனிலையோடு முடித்துக் கொள்க.

திருவாவடுதுறை மடாலயத்தின் வடக்கு வாயிலிற்றிருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் விநாயகருக்குச் சிவப்பிரகாச விநாயகரென்று பெயர். இவ்விநாயகப் பெருமானை ஆதி குருமூர்த்தியாகிய ஸ்ரீ நமசிவாய தேசிகருடைய பரமாசாரியராகிய சித்தர் சிவப்பிரகாசர் நிறுவியதால் இத்திருநாமம் எய்திற்றென்பர் ஆதீன சம்பிரதாய முணர்ந்தோர். இவ்வாதீனத்திற்கு பதினாறாவது பட்டமெய்திய ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் இப்பெருமானை ஸ்ரீ நமச்சிவாய மூர்த்தி சந்நிதியில் எழுந்தருளச் செய்திருந்தனர். பின்னர் பத்தொன்பதாம் பட்டத்திலெழுந்தருளியிருந்த ஸ்ரீ-லஸ்ரீ வைத்திலிங்க தேசிக சுவாமிகள் அப்பெருமானுக்கு வடக்கு வாயிலில் திருக்கோவிலமைப்பித்து நித்திய பூசனை முதலியன நடத்தக் கட்டளை யிட்டருளினார்கள்.

## நூல்

ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.
இஃது எட்டித்தரவு

நீர்மேக மனையானு நிறைகமல மனையானுஞ்
சீர்மேவு சேவடியுந் திருமுடியுங் காண்பரியான்
பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துந்தன் மெய்யடியார்
தெரிசித்த வுடன வரைச் சிவமாக்கத் திருவுருக்கொண்
டந்திவண்ணர் திருக்கயிலை யரியமுதற் கடைகாவல்
நந்திமுதற் பதின்மர்கட நல்லருட்சந் ததியாகித்
தென்புவிவாழ் துறைசைநமச் சிவாயர்முதற் பதினொருவர்
பின்புசைவ குருவாகிப் பெயர்புனைந்த பெரியோனே.

### இவை ஆறும் ஈரடித்தாழிசைகள்

விருதூரும் விடையுடையார் வீற்றிருக்க வேற்றவிடை
மருதூரென் றிசைபடைத்த வளம்பதிக்குக் கீழ்த்திசையிற்

பூவிரிக்குஞ் சோலையிடைப் பொறிவண்டு பண்விரிக்குங்
காவிரிப்பேர்த் திருநதியின் கரை தனக்குத் தென்றிசையிற்

கேயூர மாயூருங் கிளரரவப் பணியாளர்
மாயூர மாவூரின் வசையறுமேற் றிசையதனிற்

காஞ்சியினு மதிகமெனக் கண்ணுதலா ரண்ணலுறை
வாஞ்சியமா கியநகரின் வடதிசையி னடுவாக

வைப்பிலா கியசோதி மாசிலா மணிநாத
ரொப்பிலா முலையுடனே யுறைதிருவா வடுதுறையிற்

கருச்சுற்றும் பெரும்பிறவிக் கடலிலெனை யெடுத்தாண்ட
திருச்சிற்றம் பலவபுகழ் திகழ்தருசிந் தாமணிகேள்.

இவை நான்கும் அராகங்கள்.

பதிபசு வொடுதளை பகர்பொரு ளுயர்பதி
யதுவொரு விதமுயி ரறைதரு திரிவித

முறையறு தளையவை மொழியிலை விதமுள
விறையடி யுளமிசை யெழுதிடி லிலைதளை

யுதகமொ டுவர்நில வுவதென வுயிரொடு
சுதமிலி கலவிசெய் துறுமறு பவமறுந்

தவிடுமி யறவொளி தருமரி சியின்முளை
யவிர்தர னிகரென வருளினை யொருமொழி.

இவை நான்கும் பெயர்த்தும் ஈரடித்தாழிசைகள்.

தீம்பாகு முக்கனியுஞ்செந்தேனும் பைங்கரும்பும்
வேம்பாகு மம்மொழிபோல் வியன்சுவையுண் டாயிடுமோ

ஒண்செவியின் வழியோடி யுள்ளுருகிப் பசுகரண
மென்செவிய சிவகரண வியல்பாக்கிற் றம்மொழியே.

இறந்தநாள் வீணாளா மினிதாவுன் றிருவாக்குப்
பிறந்தநா ளிதுவன்றோ பிறந்தநா ளடியேற்கே

உற்றேவல் வினையறுத் திட் டோங்கியநின் பூங்கழலிற்
குற்றேல் கிடைத்திடுமேற் கூடுமுத்தி யிதில்வேறோ.

இவை இரண்டும் இருசீரடி யம்போதரங்கங்கள்

மெய்கண்ட கலைத்தவ னீ
மேதைநெறி நிலைத்தவ னீ
பொய்கண்டு தீர்ந்தவ னீ
புன்பிறவி ஈர்த்தவ னீ !

**இவை எட்டும் இருசீரோரடி யம்போதரங்கங்கள்.**

மதிகொடுத்தனை துதியடுத்தனை
மயலகற்றினை செயலையெற்றினை
கதியளித்தனை யெதிர்விளித்தனை
கரமமைத்தனை யரில்குமைத்தனை.
எனவாங்கு (தனிச்சொல்)

**நேரிசையாசிரியச் சுரிதகம்.**

செவ்வியின் மலர்ந்த செந்தா மரையிதழ்
நவ்வியின் மதியொடு நட்புற் றமர்ந்தன
வெள்ளுகிர்ச் செவ்விரன் மேற்பட விளங்கி
யள்ளற் பிறவி யலைகடற் புணையா
யனிச்சப் பூவு மன்னத் தூவியு
மினிச்சில பொறுக்கு மென்னச் சிவந்து
மெய்யடி யாருள மென்மலர் போலப்
பொய்யடி யேன்மனப் பொறையினும் பயின்று
தருவடி வைந்து மிருவடி வாகிக்
கருவடி களைந்தநின் றிருவடி வணங்குவன்
மூவகைப் பந்த முட்டற நீக்கி
யாவகை தருஞா னாதிக ளுதவி
நெறியுறு ஞான நிட்டையி
னறியா தறியு மறிவரு ளெனவே.

**அரும்பதவுரை :**

கமலம் மனையான் - தாமரை மலராகிய வீட்டிலிருக்கும் பிரமதேவன். பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துஞ் சிவமாக்கலைச் சிவஞானசித்தியார் 323 ஆவது திருவிருத்தத்திற் காண்க.

பதின்மர்களாவாரும் பதினோருவராவாரும்.

"1 திருநந்திகுரு, 2. சனற்குமாரர், 3. சத்தியஞான தெரிசினி, 4.பரஞ்சோதியார் திகழு, 5. மெய்கண்ட, 6. ரருணந்தி, 7.மறைஞானசம்பந்த ரொ 8. டுமாபதி சிவம் 9. அருணமச்சிவாயர் 10. சித்தர் சிவப்பிரகாசர் அணி துறைசை 1.நமச்சிவாயர் ஆரணம்பரவு 2. மறைஞான 3 ரம்பல வாணரவி 4. ருருத்திரகோடியார் பொருவில் 5.வேலப்பரிரு 7. குமாரசாமிக்குரவர் புகழ் 8. மாசிலா மணியர் தம் புதல்வரெனவரு 9. ராமலிங்கரிரு 11. வேலப்ப போத ரெமையாள வேண்டிவரு திருச்சிற்றம்பலக்குரவர் அம்பலவாண குருசுப்பிரமணிய வரதனம்பலவாண குரு சுப்பிரமணியரம்பலவாண ரடிகள் போற்றி " வைப்பு இல் ஆகிய- தன்னைத் தோற்றுவிப்பார் ஒரு தலைவரின் றித்தானே தன திச்சையால் சகளீகரித்த. புதையற்றிரவியம் என்பாருமுளர்.

ஒருவிதம் - ஒன்றாக அறியப்படுதல். ஒன்றென்றலும் ஆம். திரிவிதம் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூன்று பிரிவு.

தளை - பந்தம். ஐவகை - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன. உதகம் - நீர், உவர் - உப்பு, சுதமிலி- அழிவில்லாத சிவம், கலவி - கலப்பு. மறுபவம் - வருபிறப்பு.

"தவிடுமி யறவொளி தருமரி சியின்முளை
யவிர் தர னிகரென வருளினை யொருமொழி"

முளைதோன்றுவதற்குக் காரணமாகிய தவிடும் உமியும் நீங்கிய அரிசியில் முளைத்தற் சத்தி தோன்றுமாறு போல அறிவு இச்சை செயல்களாகிய காரணங்களின் உருசிறிதும் இலவாகிய எளியேனுக்கும் ஸ்ரீ பஞ்சாக் கரத்தை அருளினையென்க.

ஒருமொழி - பெரும்பெயர், இதனை வடநூலார் மகாவாக்கியம் என்பர். இச்செய்யுளின் கருத்தை "கருதிகளொருகோடி சொல்லினுந் தோன்ற தென்றிடுகுணலை, சொரூபானந்தன் ஓர் சொல்லிலானந்தந் தோன்றிடுமென்றிடுகுணலை " என்னும் தத்துவராயர் திருவாக்கானறிக.

அம்மொழி - குருமொழி, அகரம் - பண்டறிசுட்டு,

அம்மொழியே ஒண் செவியின் வழியோடி உள்ளுருக்கி பசுகரணம் செவ்விய சிவகரண இயல்பாக்கிற் றென்க.

செவி - தொகுத்தல். இறந்தாள் - திருவாக்குக் கேளாது கழிந்தாள் : வீணாளாகும். ஆம் - ஆசை. குற்றேவல் கிடைத்திடுமேல் என்றது கிடைத்தலருமை என்பது விளக்கி நின்றது. மயல் - மயக்கம், செயல் - கன்மம். எற்றல் - கெடுத்தல், கரமமைத்தல் - அபயஞ்செய்தல், அரில் - குற்றம், கலைத்தவன் - கலையோடு கூடிய தவத்தையுடையவன். மேதை - அறிவு.

நவ்வி இல் மதி - மானென்னுங் களங்கமில்லாத சந்திரன், உகிர் - நகம். அள்ளல் - சேறு. தூவி - இறகு. பொறை - கல். தரு - பஞ்சதருக்கள். கருவடி - கருவின் மூலம். மூவகைப்பந்தம் - ஆணவம் கன்மம் மாயையின் கட்டு. ஆவகை தரும் - மேன்மையுறுத்தற் கேதுவாகிய. ஞானாதி - ஞானமுதலியவைகள். அறிவு - மெய்ஞ்ஞானம்.

## நேரிசை வெண்பா

2. வேதியர்க ளாரணமு மெய்யாக மத்தொகையு
மோதி யறியநமக் கூழிசெலும் - தீதி
றிருத்துறைசை மேவுதிருச் சிற்றம் பலவ
ரருட்பெருகு மோர்மொழியே யாம்.

## கட்டளைக் கலித்துறை

3. ஆமா றுரைப்பன் மனமே குயிலிசை யார்ந்தடருந்
தேமா மரநிறை செங்கனி தூங்குஞ் செழுந்துறைசைக்
கோமா னெனுந்திருச் சிற்றம் பலகுரவன் குளிர் தாட்
பூமா நிழலணை யானந்தத் தேன்வந்து பொங்கிடுமே.

அரும்பதவுரை :

பூ-பொலிவாகிய, மா- பெரிய. தாள் நிழல் - திருவடி நிழல். பூவையுடைய மாமரமெனினுமமையும்.

## அறுசீர்க்கழி நெடிலடியாகிய விருத்தம்.

4. பொங்கி டும்புனல் படர் காவிரி
புடைத்துச் சந்தகி லலைமேல்விடு
துங்க மொன்றிய திருவாவடு
துறைக்குட் டங்கினெ னிருள்கீறின
ளெங்க ணும்புக நிலவேறிட
வெனக்குப் பங்கய மலர்போலொளிர்
செங்க ரந்தனை முடிசூட்டிய
திருச்சிற் றம்பல குருசாமியே.

அரும்பதவுரை :

பொங்கிடும் - மிகப்பெருகும். புடைத்து - தாக்கி சந்து-சந்தனமரம். - துங்கம் - உயர்வு. இருள் - மலவிருள். கரத்தை முடிசூட்டிய - அத்த மத்தக சையோகஞ்செய்த. செபிக்கில் - சொன்னால்.

## பஃறொடை வெண்பா

5. குருசாமி பாதமலர் கும்பிடுவா நாமென்
றொருகா னினைக்கி லுயர்கரும மெய்துந்
தருமடத்திற் சேரிற் றவமெலாங் கூடுந்
திருநாம மோர்காற் றெரிக்கிற் செபமாம்.
வடிவதனைக் காணின் மகாபா வனையா
நெடிது பணியி னிமல வறிவெய்தும்
பத்தி யுடனே பணித்தன செய்வார்க்கு
முத்தி யிரண்டு முதன்மை பெறவெய்துந்
தென்துறைசை மேவுதிருச் சிற்றம் பலகுரவ
னென்று மருளுடையா னே.

அரும்பதவுரை :

நிமல அறிவு - மெய்ஞ்ஞான உணர்ச்சி முத்தி இரண்டு - பரமுத்தி அபரமுத்தி என்பர்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்

6. யானென்று மெனதென்று மகப்பற்றும்
புறப்பற்று மெய்தா வண்ணந்
தானென்று வலிந்தாண்டு காயமொடு
பொருளாவி தனக்கே கொண்டான்.
றேனென்ற மொழித்துறைசைத் திருச்சிற்றம்
பலகுரவன் றிசைசூழ் பாரில்
வானென்றும் பெய்வதுபோ லருள்புரிந்த
வதற்கொருகைம் மாறிலேனே.

அரும்பதவுரை :

சீடர் உடல், பொருள், ஆவி மூன்றையும் ஆசாரிய ருக்குத் தத்தஞ்செய்தலால் தனக்கே கொண்டானென்றார்.

பொருளென்றது இருவினைகளை. இதனை அத்துவித வாக்கியத்திற் காண்க.

## கட்டளைக்கலிப்பா (மடக்கு)

7. மாறி லாதருள் பேரருள் வாரியன்
மதிக்க ருங்கலை யோதிய வாரியன்
மீறி யேயருள் சேர்திருக் கண்ணினான்
விளங்கு மாவடு தண்டுறைக் கண்ணினான்
ஆறு சேர்சடை யம்பலத் தாண்டவ
னருச்ச னைக்குரித் தாகவந் தாண்டவன்
தேறு மஞ்செழுத் தோதிய நாவனே
திருச்சிற் றம்பல தேசிக னாவனே.

அரும்பதவுரை :

அருள்வாரி - அருட்கடல். ஆரியன் - ஆசாரியன் ஆவடுதண்டுறைக்கு அண்ணினான்- திருவாவடுதுறையின் கண் ணெழுந்தருளியிருப்பவன். குறவேற்றுமை மயக்கம். அண்ணுதல் - ஈண்டு எழுந்தருளலின் மேற்று.

## கட்டளைக்கலித்துறை

8. ஆவது முத்தி யழிவது பாச மருளறத்தின்
றேவது வாந்திருச் சிற்றம் பலவரைத் தேமலர்ப்பூங்
காவது சூழுந் துறைசை மடத்தினிற் கண்டுநெஞ்சே
நாவது வாழ்த்த முடித்தாழ்த்து வந்திக்க நாம் செலினே.

அரும்பதவுரை :

தேவதுவாம் - தெய்வத்தன்மை பொருந்திய. அது பகுதிப்பொருளது.

## இன்னிசை வெண்பா

9. செல்லலை மாற்றுதிருச் சிற்றம் பலகுரவர்
செல்லலை சோலை திகழ்துறைசை மாநகரின்
மெய்யடியார் கூட்டத்தின் மேவினோ மாமாயப்
பொய்யடியார் கூட்டவலம் போம்.

அரும்பதவுரை :

செல்லல் - துன்பம், செல் - மேகம், அவலம் - கேடு.

## வெண்டாழிசை.

10. போதமுதவப் புகழ்துறைசை நன்னகர்வாய்த்
தீதகல வந்ததிருச் சிற்றம் பலகுரவ
னேத மகற்று மெமக்கு.

கட்டறத் துன்பங் களைந்தா வடுதுறையிற்
சிட்டர் பரவுதிருச் சிற்றம் பலகுரவ
னிட்ட முதவு மெமக்கு.

வாச மலர்க்கா வளரா வடுதுறைவாழ்
தேசம் பரவுதிருச் சிற்றம் பலகுரவ
னேச றவு தீர்க்கு மெமக்கு.

அரும்பதவுரை :

ஏதம் - துன்பம் கட்டு - பந்தம். சிட்டர் - நல்லொழுக்கமுடைய பெரியவர், ஏசறவு - கவலை.

## வெண்டுறை

11. குவலயமெங் கும்புகழுங் குளிர்புனற்கா விரித்
(துறைசைக் குருரா யன்சீர்த்
தவவடிவ மாயுதித்த திருச்சிற்றம் பலவனிணைத்
(தாள்கண் டோரே

புரந்தரன் கோவிலும் போதன்மா லுலகமும்
நிரந்தபல் வளங்களு நிதிபதி யாக்கமு
மிரந்துகொண் மென்னினு மெண்ணலா ரண்ணலார்
பரந்தபே ரின்பமாம் பரவையே படிகுவார்
பெருந்தரும் பெருமையார் மற்றையோர் கட்குமே.

அரும்பதவுரை :

நிதிபதி - குபேரன். கொண்மென்னினும் - ஏற்றுக் கொள்ளு மென்று வேண்டினாலும். எண்ணலார் - மதிக்க மாட்டார். அண்ணலார் - ஈண்டுக்குருராயர். பரவை - கடல். மற்றையோரென்றது - இந்தின், பிரமன், திருமால், குபேரன் முதலியோரையென்க. கதிர் - சூரியன். துன்றுதல் - நெருங்குதல்.

## புயவகுப்பு.

12. கனக நற்சபை நிருத்தர்க் கன்பொடு
காலி லென்றுநன் மலர்புனைந்தன
கலைவி ரும்பிய தவத்துப் பண்டிதர்
காத லங்கவி களையணிந்தன
கதிரி ளங்கதிர் பரப்பத் துன்றழ
கான பங்கய மெனவிளங்கின
கரவில் சந்தியி னிசித்திட் டும்பல
கால சைந்திசை வொடுசிவந்தன
மனமு வந்திரு பதத்திற் கும்பிடு
வார்கை வெண்பொடி மழைபொழிந்தன
மதித ருங்கலை யெழுத்துத் தங்கிதழ்
வாய விழ்ந்திட முறைபயின்றன
வடிவமைந்தகண் வடக்கைக் கொண்டெழில்
வாய்தரும்படி யொளித தும்பின

மூனம டைந்தவர் சிரத்திற் பைம்பொனின்
மோலி யென்றிட நெறிபதிந்தன
மொழித ரும்பெயர் துதித்துச் சென்றவர்
மூழ்கி டும்பெரு மிடிதுரந்தன
முதிய செம்பொனி னமைத்துச் சுந்தர
மோதி ரம்பல சுடர்விரிந்தன
முனிவர் வண்சுரர் தமக்கிட் டந்தர
மோது தண்புனன் முறையெறிந்தன
சினக ரம்பெறு சிவத்தைச் சிந்தனை
தேறியொண்சிர மிசைகு விந்தன
தினமி லிங்கம திருக்கச் சந்திர
சேக ரன்றனை வரமலர்ந்தன
செபவ டம்பல வெடுத்துக் கண்டவர்
சீர மைந்திட வருள்புரிந்தன
தெளிவு ளம்பெறு திருச்சிற் றம்பல
தேசி கன்றன திரள்புயங்களே.

அரும்பதவுரை :

கரவு இல் சந்தியில் - கள்ளமில்லாத சந்தியாகாலத்தில் நிசித்தல் - நியாசஞ்செய்தல், அது தொடுதலென்றவாறு. அங்கநியாசங் கரநியாசம் என நியாசம் இரு வகைப்படும். கை-கையில். வெண்பொடி - விபூதி, வெண்பொடி - பண்புத்தொகை. இதழ் ஏடு, "தோடே மடலே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரதானுணர்க. கண்வடம் - அக்கமாலை, துகிர்-பவளம். மோலி - கிரீடம். சிரத்திற் பதிதல் - அஸ்த மஸ்தக சையோகஞ் செய்தல். இடந்தர -

பூசை வேதியி லிடங்கொடுக்க, புனல் முறை யெறிதல் - புரோக்ஷித்தல், சினகரம் - கோவில், சந்திரசேகரன்றனை வர மலர்தல் - ஆவாகனஞ்செய்தல். அருள்புரிதல் - ஈங்கேகொடுத்தல்.

## கட்டளைக் கலித்துறை

13. புயலே சுமந்தெழு மின்போலு மங்கையர் பூந்துடங்கண்
மயலே சுமந்து வருந்துநெஞ் சேவள மார்துறைசை
யியலே பெறுந்திருச் சிற்றம் பலவரிணை மலர்த்தா
ளயலே வணங்கின் வருமே குறைவறு மானந்தமே.

அரும்பதவுரை :

இயல் - ஈண்டு ஆசானுக்குரிய இலக்கணம். அயல் - பக்கம்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்.

14. ஆன்பாலுஞ் செந்தேனு மெனமதுரத்
தமிழ்பாடி யற்பர் தம்பால்
ஏன்பாவி காளலைவீ ரிம்மையினு
மறுமையினு மிடரே யன்றோ
மின்பாயும் புனற்றுறைசைத் திருச்சிற்றம்
பலகுரவன் மெய்ச்சீர் பாடில்
வான்பாயுஞ் சுரராவின் கன்றதுபோற்
குறைவறுநன் மகிழ்வுண் டாமே.

சுரரார் ஆ - காமதேனு

## தாழிசை

15. ஆசை வைத்துப் பொன்புவி மாதருக்குத் துன்புற
வாவி விட்டுக் கும்பியி லணுகாமே
நீச விர்த்திப் பண்பினை மோசனித்துத் தன்பத
நீழ லைப்பெற் றின்புற வருள்தாராய்
தேச மெச்சச் சென்றர னாவை யட்டுக் கண்டருள்
சேர்து றைக்குட் சந்தத மெதிர் தாழ்வோர்
மாச கற்றிப் பின்சிவஞானம் வர்த்திக் கும்படி
வாழ்தி ருச்சிற் றம்பல குருநீயே.

**அரும்பதவுரை :**

ஆவி - உயிர், கும்பி - ஒரு நரகம், நீசம் - தாழ்வு.

அரன் - மாசிலாமணியீசர், ஆ-பசு, மோசனித்து - நீக்கி, அருள் - உமாதேவி.

## ஒருபொருண்மேல் மூன்றடுக்கிய அகவற்றாழிசை

16 (1) நீந்துபுனற் பொய்கை நிறைதுறைசை யூர்க்க திப
ராய்ந்த வறிவர் திருச் சிற்றம் பலகுரவர்
சேந்த சரணம் பணியாமோ நெஞ்சே.

(2) அன்னக் கொடிகட்டி யார்க்குந் தருந்துறைசை
மன்னு முனிவர் திருச் சிற்றம் பலகுரவர்
பொன்னஞ் சரணம் பணியாமோ நெஞ்சே.

(3) தேவாதி தேவர் திருவா வடுதுறையிற்
கோவாக வந்ததிருச் சிற்றம் பலகுரவர்
பூவார் சரணம் பணியாமோ நெஞ்சே.

**அரும்பதவுரை :**

சேந்த - சிவந்த.பணியாமோ என்றவற்றினோகாரங்கள் எதிர்மறை. பணிவாமென்றபடி.

## அகவற்றுறை.

17. சேவைக் கினியத்திருச் சிற்றம் பலகுரவர்
கோவைத் தமிழ்மாலை கொண்டாரென் பாலுமே
கோவைத் தமிழ்மாலை கொண்டார்சீர்
மேவித் துறைசையின் மெய்யடி யாரையான் மேவவே.

அரும்பதவுரை :

சேவைக்கு - வணங்குதற்கு. கோவைத் தமிழ் மாலையென்றது திருச்சிற்றம்பல தேசிகர் பேரில் இந்நூலாசிரியர் இயற்றிய அகப்பொருட்கோவையை அது இப்பொழுது கிடைக்கவில்லை.

## மூன்றடுக்கிவந்த கலித்தாழிசை

18 (1) மேதா வியர்புகழு மெய்த்திருச்சிற் றம்பலவர்
பாதார விந்தம் பணிவீ ரழியா நலம்வேண்டின்

(2) திருவா வடுதுறைசை திகழ்திருச்சிற் றம்பலவர்
சரணார விந்தம் பணிவீ ரழியா நலம்வேண்டின்.

(3) ஆட்டா னெனைக்கொண் டமர்திருச்சிற் றம்பலவர்
தாட்டா மரைகள் பணிவீ ரழியா நலம்வேண்டின்.

அரும்பதவுரை :

மேதாவியர் - அறிஞர். ஆள் - அடிமை. தான் - அசை. குறிப்பு : -19ஆம் பாடல் முதல் 21-வரை 6 பாடல்கள் கிடைக்கவில்லை.

## விறலியார்.

### எண்சீரடியாசிரிய விருத்தம்

25. மலைதாங்கு வெள்ளரவி யொழுக்கம் போல
மாநிலத்தோர் கண்டுமன மதிக்கத் தக்க
விலைதாங்கி லாதமுத்து வடங்கள் பூண்டு
மிளிர்பெரிய தனஞ்சுமந்த விரலி யாரே

யலைதாங்கு காவிரியார் துறைசை யூரி
லருடாங்கு திருச்சிற்றம் பலவர் சைவக்
கலைதாங்கு கல்விநலம் பாடிப் பாடிக்
கருணைதாங் கியவாறும் பாடு வீரே.

அரும்பதவுரை :

விலை தாங்கிலாத - விலை மதித்தற் கரிய.

**சித்து**

**தாழிசை**

26. பாதம்பணி வோருக்கருள் பரமன்றிருச் சிற்றம்
பலதேசிகன் றுறைசைப்பதி பகர்சித்தர்கள் யாமே
சூதந்தனி லேகாய்தரச் சொலிப்பொன்வர வழைப்போந்
துரிசற்றவெள் ளியிலேமிகத் துதித்தங்கமுங் காண்போ
மேதந்தரு நாகந்தனி லிரும்பைவரப் பார்ப்போ
மெழுவாரண மொருகைதனி லெடுத்தேநடந் திடுவோம்
மாதந்தனில் வருடம்மிக வருமா றறி வோமே
மண்மேலரம் பையைக்கால்பெற வைத்தேதருவோமே.

அரும்பதவுரை :

சூதம் - இரசம், மாமரம். காய்தர - காய, காய்களைத் தர, சொலி - சொலிக்கின்ற, சொல்லி, பொன் - திரவியம், பொன் போன்ற பழம், துரிசற்ற - குற்றமற்ற, துரிசு என்னும் பொருளின் தன்மை நீங்கிய, வெள்ளியிலே - வெள்ளைநிறமுள்ள வப்பொருளாலே. துதித் தங்கம் - பைநிறையப் பொன்னையும், துரிசு அற்ற - குற்றமில்லாத - வெள்ளியிலே - சுக்கிரவாரத்திலே. துதி - தேவரால் துதிக்கப்படுகின்ற, தங்கம்-பொன் இங்கே குரு என்னும் கிரகத்தைக் காண்போம். நாகம் - துத்த நாகம், பாம்பு, இரும்பை - இரும்பினை, பெரிய படத்தை, எழுவாரணம்

- ஏழுயானை, ஏழுகோழி. மாதந்தனில் - மாதங்களால், மாதத்தில். வருடம் - ஆண்டு, மழை. அரம்பை - வாழை, தெய்வப்பெண். மண்மேற்கால் பெற - பூமியில் வேரூன்ற, புவியில் பாதம் பொருந்த வைத்துத் தருவாமென்றவாறு.

"வட்டப் பொட்டு வரிப் பொட்டு வன்னியன் மகளைத் தொட்டிட்டுத், தொட்டாற்றுரிசு வெளுத்திட்டுத் துய்ய சூதங்கட்டிட்டு" என்னுஞ் செய்யுளில் துரிசு என்னும் பொருள் வெண்ணிறமடைதலும் அங்ஙனம் வெண்ணிற மடைந்த துரிசினை இரசத்தில் இட இரதங் கட்டுற்றுப் பொற்கட்டியாதலுமா மென்க.

**களி.**

**தாழிசை**

27. தருவி ருந்தகர தலர்பெ ருந்துறைசை
தனிலி ருந்தசிவ தேசிகர்
தருக்கற் றைந்தைவிடு திருச்சிற் றம்பலவர்
தமக்கிட் டங்குலவு களியர்யா

முருவி ருந்துபுணர் தந்தை யானவனு
மொருவ னேபிரம சாரியா
முற்றப் பிள்ளைபல பெற்ற வன்னையுமொ
ருத்தியே யழிவில் கன்னியாங்

கருவி ருந்ததிலை யாம வர்க்குவரு
காய வேற்றுமையு மில்லையாங்
கண்ட மெய்யுருவை விண்டு கூறுவது
கடின மாமுறையு மின்றியே

தெருவி ருந்துமு ளளித்த தாய்பினொரு
சேயு டன்கலவி செய்யுமாஞ்
செய்து பெற்றுதவு பிள்ளை கட்கழிவு
செய்து மோர்பொழுது தின்னுமே.

**அரும்பதவுரை :**

தருவிருந்த - கொடுத்தலிற் கற்பகத் தன்மை வாய்ந்த. கரதலர் - திருக்கரங்களை யுடையவரும். பெரும் - பெரிய துறைசைதனில் - திருவாவ டுதுறையின் கண். இருந்த - (அநாதி முத்த சித்துருவாகிய சிவமே அநாதி பெத்த சித்துருவாகிய ஆன்மாக்களுய்யும் பொருட்டு) திருவுருக்கொண்டு எழுந்தருளியிருந்த. சிவதேசிகர் - சைவகுரு மூர்த்தி. தருக்கு அற்று - (இயல்பாகவே பிறவிக்குக் கரணமாகிய) செருக்கு நீங்கி. ஐந்தைவிடு - பொறிவாயில் ஐந்தவாவையும் அவித்த. திருச்சிற்றம்பலவர் தமக்கு - திருச்சிற்றம் பலவராகிய பரமாசாரியருக்கு. இட்டங்குலவு - நட்புப்பொருந்திய, களியர்யாம் - கட் களிப்பை யுடையவராகிய யாம். (எமது வரலாற்றைக் கூறுவோம் கேண்மின்கள்).

உருவிருந்து புணர் தந்தை யானவனும் ஒருவனே - வடிவத்தோடு கூடிப்புணர்கின்ற எங்கள் தகப்பனானவனும் ஒருவனே யாவன். பிரமசாரியாம் - (அவனும்) பிரமசரியத்தினின்றும் சிறிதும் வழுவாதவனாம், உற்ற- இவ்வுலகிற் பொருந்திய. பல பிள்ளை - பல பிள்ளைகளாகிய எங்களை. பெற்ற - ஈன்ற. அன்னையும் - தாயும். ஒருத்தியே - ஒருத்தியேயாவள். (அன்னாளும்) அழிவில் கன்னியாம் - எக் காலத்திலும் அழிவில்லாத கன்னித்தன்மையினின்றும் சிறிதும் வழுவாதவளாம். அவர்க்கு- அவ் விருவரிடத்தும். கரு-(தந்தையிடத்து இரண்டு மதியும் தாயிடத்துப் பத்துத் திங்களும் தங்குதலாகிய) கருப்பம். இருந்ததில்லையாம் - இருந்ததாக ஒருவருஞ் சொல்லக் கேட்டதில்லையாம். வரு காய

வேற்றுமையுமில்லையாம் - இருவினை காரணமாக வருகின்ற உடம்பினிடத்து ஆண் பெண்ணென்ற வேறுபாடு மில்லையாம். மெய் கண்டவுருவை - உண்மையாகப் பார்த்த அவர் வடிவங்களை. விண்டுகூறுவது - வெளிப்படச்சொல்வது. கடினமாம் - அரிதாகும். முன் அளித்த தாய் - முன் எங்களைப் பெற்றதாய் முறையுமின்றி - உலகியல் முறை சிறிதுமில்லாமல். தெருவிருந்து - தெருவின் கணிருந்து. பின்னொரு சேயுடன் - பின்தோன்றிய ஒரு மகனுடன். கலவி செய்யும் - புணருவாள். செய்து - அங்ஙனங் கலவி செய்து. பெற்றுதவு பிள்ளைகட்கு - பெற்றுத்தந்த மக்களுக்கு. அழிவுசெய்து - கேட்டைச்செய்து. ஒருபொழுதில் - ஒரு பொழுதின் கண் தின்னும் - தின்பாள் என்றவாறு.

இனித், திருச்சிற்றம்பல தேசிகருக்கு இட்டங் குலவு அணுக்கத் தொண்டராகப் பொருந்தியதனாலுண்டாகி சிவாநந்தக்களிப்பையுடைய யாம் எங்கள் சந்தான பரம்பரை வரலாற்றைக் கூறுகின்றோம். கேளுங்கள்.

உருவிருந்து - திருவுருவத்தோ டிருந்து, புணர் - சத்தியோடு கூடிய, தந்தையாரும் - சிவபெருமானும். ஒருவனே - ஒருவனேயாவான். பிரமசாரியாம் - அவனும் எண்ணிறந்த சராசரங்களைச் சத்தியோடுகூடி யீன்றும் விகார மின்மையால் நைட்டிக பிரமசாரியாவன். உற்ற - இந்த உலகத்திற் பொருந்திய, பலபிள்ளை - எண்ணிறந்த சராசரங்களாகிய பலபிள்ளைகளையும், பெற்ற - ஈன்ற, அன்னையும் - தாயாகி சத்தியும், ஒருத்தியே - ஒருத்தியேயாவள். (அவளும்) அழிவில்கன்னியாம் - மகா

சங்காரகாலத்திலும் அழியாத கன்னித் தன்மையு டையவளாம். அவர்க்கு - அவ்விருவர் மாட்டும். கருவிருந்ததில்லையாம். எண்ணிறந்த சராசரங்களையும் தம் இச்சா மாத்திரத்தில் தோற்றுவித்தலன்றிப் பன்னிரு மாதக் கருவயினுறத் தோற்றுவித்தில்லையாம். வருகாய வேற்றுமையு -மில்லையாம் - (அவ்விருவர்க்கும் அருள் காரணமாகக் கொள்ளும் திருமேனியன்றி) இருவினை காரணமாக வரும் மக்களுடலிலுள்ள ஆண் பெண் என்ற வேற்றுமை போன்ற வேற்றுமையில்லையாம். முறையுமின்றியே -(சிவத்தினின்றுஞ் சத்திதோன்ற வேண்டுமென்ற) வரன்முறையில்லாமலே. தெருவிருந்து - முச்சந்தி வீதியிலிருந்து.

சிவஞான சித்தியார் 'சிவஞ்சத்தி' என்னுஞ் செய்யுளாலறிக.

முன்னளித்த தாய் - சிவத்தை முன்னர் தோற்றுவித்த தாயாகிய சக்தி. பின் - பின்னர். அளித்த - (சத்தியாகிய தன் மாட்டுத்) தோற்றிய சேயுடன் சிவத்துடனே, கலவி - கலத்தலை, செய்யுமாம் - ஐந்தொழிலியற்றுதலைச் செய்யும். செய்து, அங்ஙனம் ஐந்தொழிலியற்றுதலால் பெற்ற - தோற்றுவித்த, பிள்ளை கட்கு - குழவிகளை, ஓர் பொழுது ஓர் காலத்துச் சங்கரித்து தின்னும் - தன்னுளடக்கிக்கொள்ளும்.

தன்னடியார்க்கு வேண்டியாங்களித்தலின் தருவிருந்த கர தலரென்றார். யானெனதென்னுஞ் செருக்கினையறுத் -தாராதலின், தருக்கற்றைந்து விடு திருச்சிற்றம்பல பலவரென்றார். களியர். தங்களுக்குள் முறையின்றிக் கூடுவதியல்பாதலின் அங்ஙனமுறையின்றிப் பலர் தந்தை

யரிலர் ஒருவனே தந்தையா மென்பார் ஒருவனே தந்தையாமென்றார். எண்ணிறந்த சராசரங்களை யீன்றும் அம்மை யப்பர்கள் விகாரமின்றி இருத்தலின் ஒருவனே பிரமசாரி என்றும் ஒருத்தியே கன்னி என்றுங் கூறினார்.

இதனை "பவன் பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்" என்னுஞ் சிவஞான சித்தித் திருவிருத்தத்தானுணர்க, களியர் காய வேற்றுமையிலை என்றது. ஆண் மகன் ஆண்மகனே. பெண் மகள் பெண் மகளே வேறு பாடின் றென்பார் காயவேற்றுமையு -மில்லையாமென்றார். சக்தியும் சிவமும் மரமும் காழ்ப்பும் போல ஒற்றித்து நிற்றலிற் காயவேற்றுமையுமில்லை யாமென்றார். சுராபானம் பண்ணலால் என்றும் ஒரு படித்தாலிருத்தலின் களியர் கண்ட மெய்யுருவை இத் தன்மையென்று கூறுதல் யாவர்க்கும் அரிதாமென்பார் கடினமாமென்றார். களி மயக்கத்தால் முச்சந்தியிலிருந்து முறையின்றிச் சேயோடு கூடுதலின், சேயோடு கலவி செய்யுமாமென்றார். சத்தி தத்துவத்தினின்றுந் தோன்றிய, ஈசுரஞ் சாதாக்கிய முதலிய வற்றோடுங் கூடிச் சத்தி தத்துவந்தொழில் நடாத்தலின் முன்னளித்ததாய் சேயுடன் கலவி செய்யுமென்று கூறினார்.

முச்சந்தி - இடைகலை, பிங்கலை, சுழுமுனை யாதியமூன்றும் கூடுமிடத்தை முச்சந்தி என்றார்.

களியர் களிமயக்கத்தால் செய்வதும் உறுவதும் அறியாது தானீன்ற குழவியைக் கோறல் செய்து உண்பாள் என்பார், அழிவு செய்து உண்ணுமென்றார்.

சத்தி சத்தனினின்றும் வேறின்றி நின்று அழித்தல் செய்து தன்னுட் கரக்குமென்பார், பிள்ளைகட் கழிவு செய்தும் ஓர் பொழுது தின்னுமென்றார்.

## ஊசல்
### ஆசிரிய விருத்தம்

28. திருநந்தி முதற்பதின்மர் சீரைப் பாடித்
திகழ்துறைசை நமச்சிவா யரையே பாடிக்

கருநந்து மறைஞானர் முதலா வந்த
காரணர்க ளீரைவர் மலர்த்தாள் பாடி
யுருநந்த முருமாற்ற வெடுத்த நாத
ருயர்திருச்சிற் றம்பலத்தே சிகனா ரன்பர்க்

கருள்கின்ற வாபாடி யாடீ ரூச
லன்னநடைப் பொன்னனையீ ராடி ரூசல்.

அரும்பதவுரை :

திருநந்தி தேவர் முதலாகிய ஆசாரிய பரம்பரை வரலாற்றை இந்நூல் முதற் செய்யுளுரையில் கூறிய திருவிருத்தத்தாலறிக. கரு - பிறவி. நந்தம் உரு - நம்முடலை, மாற்ற - நீக்குவதற்கு. உருவெடுத்த நாதர் - திருவுருவெடுத்த தலைவராகிய ஞானதேசிகர்.

## ஊர்
### நேரிசை வெண்பா

29. ஊனமற மேலுலகி லுள்ளவரு மானிடவ
ரான திருவா வடுதுறையே - ஞான
குருமணியென் கண்மணியென் கோதகற்றி யாண்ட
வொருதிருச்சிற் றம்பலவ னூர்.

அரும்பதவுரை :

இது பாட்டுடைத்தலைவர் பதியியல் புரைத்தல். மேலுலகிலுள்ளவரும் ஊனமற்ற மானிடவராதற்குக் காரணமானதுறைசையென்க திருச்சிற்றம் பலவர் உபதேசம் பெற்று வீடடைய விண்ணவர் மண்ணில் வருதலால் இடத்திரிபால் மானிடவராயினரென்க.

**மடக்கு**

**விருத்தம்**

30. ஊர்வாய்த் துறைசைக் கரதனமே
உன்னிப் பணிவார்க் கரதனமே
உபதே சப்பஞ் சாக்கரனே
ஊழைக் கனற்பஞ் சாக்கரனே

பார்வாய்ச் சோழ நாட்டானே
பாவ வினையை நாட்டானே
பரமா மதத்தை மதியானே
பரமே கருது மதியானே.

சோர்வா யொன்று மிசையானே
துட்டர் கூட்ட மிசையானே
துணைநீ யென்றா லருள் பார்க்குந்
தொல்லை விசும்பி னொடுபார்க்குஞ்
சீர்வாய்த் திருத்தா மரைக்கண்ணே
சித்த நொடித்தா மரைக்கண்ணே
செய்யாய் நினைப்புப் பலவரையே
திருவார் சிற்றம் பலவரையே.

அரும்பதவுரை :

ஊர் வாய் துறைசை - ஊராக வாய்ந்த துறைசையென்க. ஊர், பேர், உரு இல்லாத இறைவன் துறைசையை ஊராகக் கொண்டமையால் ஊர்வாய் துறைசை யென்றார். விசும்பினொடு - சுவர்க்கத்துக்கும். பார்க்கும் -பூவுலகுக்கும் நீயே துணையென்றால். அருள்பார்க்கும் - திருக் கடைக்கண் சாத்துவான். சித்தம் - மனமே. நொடித்தாம் - நொடித்தலால் உளவாகிய. அரைக்கண் - அரை மாத்திரைப் பொழுதில், சீர்வாய் - சிறப்பு வாய்ந்த, திருத்தாமரை - அழகிய கொன்றை மாலை யணிந்தவரை, கண் - கருதுவாய். திருச்சிற்றம்பலவரை - திருச்சிற்றம்பல தேசிகரை. நினைப்புச் செய்யாய் -

நினைவாய், பலவரை - பலபேரை, ஆசிரியல்லா தாரை. நினைப்புச் செய்யாய் - நினையா திருப்பாயாக. நினைப்பென்ற சொல்லையும் செய்யாயென்ற சொல்லையும் மடக் குக்கியைய ஈரிடத்துங்கொள்க. செய்யாய் என்பது விதி, மறை இரண்டற்கும் பொது.

**வெண்பா**

31. பலவரைமே லோடு பசுங்கிளியே வாயாற்
சொலவரையே காண்டெனது சூழ்ச்சி - யுலவுதிருச்
சிற்றம் பலதே சிகர்சிகரப் பூம்புனத்தி
லுற்றம் பலகா லுறவு.

*அரும்பதவுரை :*

உலவு - (அநாதி பெத்த சித்துருவாகிய யாங்கள் உய்தற் பொருட்டு அநாதிமுத்த சித்துருவே திருவுருக்கொண்டு) உலவுகின்ற, திருச்சிற்றம்பல தேசிகருடைய மலையின்கணுள்ள தினைப்புனத்தில். பலகால் - பல நாளாகத்தலைவனும் யானும். உறவு - கூட்டத்தினை. உற்றம் - உற்றனம் (அங்ஙனமிருக்க நின்னிற்பிரியேன். பிரியினுயிர் வாழேன்) என்று சொல்லிய அவரையே கண்டு -அத்தலைவரைப் பார்த்து. எனது சூழ்ச்சி - (ஆயத்தார்க்கும் தோழிமார்க்கும் களவு வெளிப்படாமல் மறைத்து) என்னுடைய உபாயத்தை. பலவரை மேல் பலவாகிய மலையின் கண்ணுள்ள இரையினைக் கருதி. ஓடு-ஓடுகின்ற, கிளியே - கிள்ளாய். (உன்செய் வினை முற்றியபின்) வாயாற் சொல் - உன் திருவாயாற் சொல்லென்றவாறு. இரைதேடும் மனக்குறிப்பு உண்மையால் மறத்தல் இயல்பாகலின் முட்டு நினைந்து உண்மை கூறுமென்பது தோன்ற வாயாற் சொல் என்றாள்.

## காலம்

மடக்கு.

32. உறுகால்சந் தனஞ்செய்மத னம்படைக்குங் காலம்
ஒளியிழையார் நெஞ்சுவித னம்படைக்குங் காலம்

அறுகால்கண் மல்லிகைப்பூ மணந்துதையுங் காலம்
ஆடவரை மடவார் கண் மணந்துதையுங் காலம்

தறுகாது தருவெல்லா முருத்தழைக்குங் காலம்
தங்கோனைக் கோகிலங்க ளுருத்தழைக்குங் காலஞ்

செறுமேவு துறைசைவரு திருச்சிற்றம் பலவர்
தென்னாட்டிற் பொருடேட வன்பர்சென்ற காலம்.

அரும்பதவுரை :

உறுகால் - மிக்கதென்றற் காற்று. சந்தனம் - தேர். அம்பு - பஞ்சபாணம். அடைத்தல் - தூணியினிறைத்தல். விதனம் - வேதனை. அறுகால்கள்-வண்டுகள். துதைதல் - நெருங்குதல் உதைத்தல் - ஊடற்கணிகழ்வ தென்க, தறுகாது - தாமதமில்லாமல். உரு - வடிவு. கோனை - மன்மதனை. உருத்து - ஆரவாரித்து, அன்பர் - ஈண்டுத்தலைவர்.

## தழைவிருப்புரைத்தல்

கலித்துறை

33. காலிற் சிலம்பு மருங்குலிற் காஞ்சிகொங் கைக்குமுத்தம்
வேலிற் சிறந்த விழிக்குமை கூந்தலிற் மேன்மலராம்
பாலிற் றிகழ்மொழிக் கேதிருச் சிற்றம் பலவர் வெற்பின்
மாலிற் செலுமன்ப தென்னா வடுதுறை வண்டழையே.

அரும்பதவுரை :

சிற்றம்பலவர் வெற்பின்ண், அன்ப, பாலிற்றிகழ் மொழிக்கு நீதந்த தழை சிலம்பும் காஞ்சியும் முத்தமும் மையும் மலருமா மென வினை முடிபு செய்க.
தழை ஏற்பித்த தோழிகூற்று.

**அகவல்.**

34. வண்டுவாய் குமட்ட மதுப்பொழி தாமரைத்
தொண்டஞ் சேர்ந்துறை தோலடிப் பறவை
பொற்கடத் தமுதம் பொதிந்தெழுந் தாங்கு
பற்பல தோன்றும் பாற்கடல் கடுப்பவும்
வானக டுரிஞ்சு மரநிரை யிறாலின்

மீனின நீர்நாய் வெரீஇமேற் பாய்தர
விழுமென வோசைகொண் டழிதரு தேனு
மெழுநிக ராடவ ரிணைப்புயத் துழுது
கச்சற நிமிர்ந்து கதிர்வடங் குழுமிப்
பச்செனுந் திருமுகம் பார்த்துள் வேர்த்துத்

தவக்குறும் போட்டித் தனிமத ராச
னிவப்புறு கிரீட நேரென வெழுந்து
காளைய ருளமொடு கண்களை யயமுறு
வாளிடு காந்த வரையெனக் கவர்ந்து
குருதி யொழுகிய குஞ்சர மருப்பென

வருண குங்கும மணிப்பூண் முலையார்
கொந்தளக் காடுங் கூடலில் யமுனையும்
வந்தவா ணியுஞ்சேர் வரநதி பொருவவும்
பாசடை மூடிப் பனித்திரை மறிதர

மாசுறு மயிலை மறுகுறப் பயிறலி
னிருண்மல மூடி யிறப்பொடு பிறப்பின்
மருளுறு கரண வகையொடு சுழலுஞ்
சகல வவத்தை தருமுயிர் மானவும்
அகல்புனல் வாவிசூ ழாவடு துறையின்

மதியமு மரவு மலர்சடை முடியுங்
கதிர்மழு மானுங் கண்ணுதல் விழியுந்
திருமுக மைந்துஞ் சேர வேகரந்
தொருமுக மிருவிழி யோங்கிய விணைக்கை
யக்க வடங்கொண் டருளுருக் கொண்டு

பக்குவர்க் கநுக்ரகம் பண்ணுத னிமித்தந்
திருச்சிற் றம்பல தேசிக நாமந்
தரிச்சுத் தொண்டர் தம்பவ மாற்றி
மானைக் காட்டி மானைப் பிடிக்குங்
கான வேடரிற் கலந்தனன் சிவனே.

அரும்பதவுரை :

அம்-நீரினிடத்துள்ள, தொண்டு - கோழியுள்ளானோடு வண்டு - வண்டுகள், வாய் குமட்ட - தேனையுண்டுமிழ, மதுப்பொழி - தேனைச் சொரிகின்ற, தாமரை - தாமரை மலரிடத்து சேர்ந்துறைகின்ற, தோலடிப் பறவை - தோலடியையுடைய அன்னப்பறவை.

பொற்கடம் தாமரைப் பூவுக்கும், தோலடிப்பறவை அமுதத்துக்கும் உவமை என்க.

மரநிரை இறால் - மரத்தினிடத்து வரிசையாகக் கட்டிய தேன்கூடு, எழு - தூண், திருமுகம் - பெண்களின் முகம், நிவப்புறு - உயர்ந்த, அயம் இழு - இரும்பை இழுக்கின்ற. வாளிடு காந்தவரை - ஒளி பொருந்திய காந்தமலை. குருதி

யொழுகிய குஞ்சர மருப்பு - இரத்தம் தோய்ந்த கொல்யானைக் கொம்பு. அருணம் - சிவப்பு. கொந்தளக் காடு- கூந்தற்கானம். கூடலில் - சேர்தலால், வாணி - சரசுவதி நதி, தேனும் கொந்தளக்காடும் கூடுகின்ற தன்மையால் தடாகங்கள் செந்நிறம் பொருந்திய சரசுவதி நதியும், கருநிறம் பொருந்திய யமுனையும் கூடிய கங்கா நதியை யொக்குமென்க. பாசடை - பசிய இலை. மறிதர - மடங்கியடித்தலால். மாசுறு மயிலை - குற்றம் பொருந்திய மீன். மறுகுஉ-மயக்க முண்டாக, பயிறல் - சஞ்சரித்தலானது. இருண் மலம் - ஆணவ மலம்.

பிறப்பின் கண்ணே மயக்கத்துக் கேதுவாகிய அகக் கருவி புறக்கருவியாகிய தத்துவங்களுடன் (கொள்ளி வட்டமும், காற்றடியும் போல) வந்துழல்கின்ற உயிரை யொத்தற் கேதுவாகிய அகன்ற வாவி என்க. கரந்து மறைத்து. அக்கவடம் - உருத்திராக்க மாலை. பக்குவர் - முத்தி விருப்பமுடையவர். பவம் - பிறப்பு. பாற்கடலையொக்கவும், தேனும் கொந்தளகக்காடுங் கூடலால் யமுனையும் வாணியுஞ் சேர்ந்த கங்கை நதியை யொக்கவும் ஏதுவாயிருக்கின்ற வாவி சூழ்ந்த திருவாவடுதுறையின் கண் மான் முதலியவற்றைக் கரந்து இருவிழியோடு அக்கவடங் கொண்டு முத்திவிருப் புடையார்க்கு முத்தி கொடுக்கத் திருச்சிற்றம்பலப் பெயர் புனைந்து மானைக் காட்டி மானைப்பிடிக்கும் வேட்டனைப் போல எம்முடன் வந்து கலந்தனன் என வினை முடிபு செய்க.

### வெண்பா

35. சிவனேயென் மெய்கண்ட தேவனே மோன
தவனேகோ முத்திபுரத் தானே - புவிமேற்
செனித்திருக்கை மாற்றுதிருச் சிற்றம் பலவ
இனித்திருகை யாலஞ்ச லென்.

அரும்பதவுரை :

மோனம் - ஞானவரம்பு, செனித்து - பிறந்து, இருக்கை - இருத்தலே, அஞ்சல் என் - அஞ்சற்க என்று சொல்வாய். (எ-று)

## கிள்ளை விடுதூது

### கட்டளைக் கலித்துறை

36. என்பா லிருக்கும் பசுங்கிளி யேகனி யின்னமுதா
வின்பா லுடன்றரு வேன்றுறை சைக்கிறை மெய்த்தவர்க்கு
முன்பா லுறைதிருச் சிற்றம் பலவன் முதுவரைமே
லன்பா லணையு மவன்பாற் பகரென தல்லலையே.

அரும்பதவுரை :

மெய்த்தவர் - தவத்தையுடைய அடியார். முன்பு + ஆல் உறையும் எனவும் பிரிக்கலாம். கல்லால விருட்சம் என்று கொள்ளும்போது தவர் என்பதற்குச் சனகாதி முனிவரையுங் கொள்க. முதுவரை - ஞானமலையுமாம்.

## இரங்கல் (மடக்கு)

37. அல்லே முழங்கு முன்னீரே
யமையா விரக முன்னீரே
அப்பா லோடு நாவாயே யவர்க்கு நீயென் னாவாயே
புல்லா நின்ற திருக்கைகளே
புகலு மவர்போந் திருக்கைகளே
பொதிந்த குறுமுள் ளிலைத்தாழாய்
போற்றிற் குறைவே றிலைத்தாழாய்
செல்லா தொழியே னென்பார்க்கே
திருச்சிற் றம்பல வன்பார்க்கே

தென்கோ முத்தி புரம்புரையுஞ்
சீரை யுடையேன் புரம்புரையும்
மல்லார் கழியே நந்தினமே
மையன் மாறா தினந்தினமே
வளர்புன் னாகத் தாவரமே மாலை யுய்யத் தாவரமே.

அரும்பதவுரை :

அல் - இராக்காலத்தில். ஏகாரம் அசை, விரகம்-ஆசைப் பெருக்கினை. உன்னீர் - கருதீர், அப்பால் - அந்தப் பக்கத்திற் செல்லும், நாவாய் - மரக்கலமே. அவர்க்கு - என்னைவிட்டுப் பிரிந்த தலைவர்க்கு. என்னாவாய் - நீ எத்தகைய உறவாவாய். புல்லாநின்ற திருக்கைகளே - (நீர் நிலையிற்) பொருந்திவாழுந் திருக்கைமீன்களே. அவர் - தலைவர். போந்து இருக்கைகளைப் புகலும் - (பொருளீட்டல் காரணமாக வேற்று நாட்டில்) சென்று இருக்கும் நிலைமையைச் சொல்லுங்கள் பொதிந்த - பொத்திய. தாழாய் - தாழையே. போற்றில் (தலைவர் பொருளீட்டச் சென்ற காலத்து நின் பிரிவால் தலைவி இறந்து படுவாள் செல்லற்க என்று) துதித்திருப்பின். குறைவேறில்லை - (எளியேனுக்கு) குறை -வேறில்லையாகும். தாழாய்- வணங்கினாயில்லை. செல்லா தொழியேன் என்பார்க்கு பரமாசாரியன் பாற் செல்லாது நில்லேன் என்னும் சத்திநிபாதத் துத்தமர்க்கு. அத்திருச்சிற்றம்பலவன் பார்க்கு - அத்திருச்சிற்றம்பலவனாகிய பரமாசாரியன் நயன தீட்சை செய்தலால். தேனுமுத்திபுரம் புரையும் சீருடையேன். அருட் சத்தியாகிய ஒப்பிலாள்) பசுத்தன்மை யொழிந்து அருட்சத்தியாகிய வடிவையெடுத்தலையொக்கும் (பசுத் தன்மைநீங்கி அருளிற் கலக்குஞ் சிறப்புடையனாயினான்)

புரம் - (அசுத்தம், துக்கம், சடம் என்றுவர்த்து விட்ட) உடலை, புரையும் - புலால் நாற்றம் முதலியவற்றால் ஒக்கும், மல்லார் கழியே - அலைகள் ஒன்றினோடொன்று பின்னுத லுற்ற உப்பங்கழியே. நந்து இனம் சங்கின் கூட்டமே. தினந்தினமே - ஒவ்வொரு நாளும். மையல் தலைவர்பால் எனக்குள்ள மயக்கம். வளர்புன்னாகத் தாவரம் - வளர்ச்சியுறுகின்ற புன்னைமரமே, மாலை - மயக்கத்தினின்றும், உய்ய - யான் பிழைக்க, வரம்தா - வரத்தைக் கொடுப்பாய்.

## வெண்பா

38. தாமரையா ணாமமெவன் சாரீறு போனபண்பென்
னேமமுறு மத்திரத்திற் கென்சொல்ல -லாமே
பொருளமையு மென்பதெவன் போதகுரு பேரென்
பரவுதிருச் சிற்றம் பலம்.

**அரும்பதக் குறிப்புரை :**

திருச்சிற்றம்பல தேசிகன், திரு + சிறு + அம்பு + அலம் + தேசிகன்

## விருத்தம்.

39. பலமுதவு தேவார மோதுவார் முன்னோதும்
பரிசு சேரும்
நலமுதவு நின்னாம மகிமையினை யென்னாவா
னவிலப் போமோ
கலமுதவு பொருள்வாரி நெல்லுதவு துறைசைநகர்க்
கதிபா மெய்ச்சஞ்
சலமுதவு பிறப்பறுத்த திருச்சிற்றம்பல குருவே
தவத்தர் கோவே.

தேவாரம் ஓதுவார் முன்னோதுவது - திருச்சிற்றம்பலம். கலம் - மரக்கலம் பொருள்வாரி - பொருளை அள்ளிக்கொண்டு. சஞ்சலம் - துன்பம்.

## சந்த விருத்தம்

40. தவத்திற்கிங் கொருவனுந் தருக்கிக்குங் கலைஞனும்
பவப்பெத்தந் தவிர்வெனும் பரத்தைத்தந் தருள்வனும்
உவப்புக்கொண் டமரரு முறச்செப்புந் துறைசையன்
சிவத்தைக்கண் டிசைதருந் திருச்சிற்றம் பலவனே.

அரும்பதவுரை :

தருக்கிக்கும் - தருக்கஞ்செய்யும். பவம் - பிறப்பும் பெத்தம் - மலத்தோடு கூடி நிற்கும் நிலை. உற - மிக. இசைதல் - அத்துவி தமாகக் கலத்தல்.

## தவம்

### அறுசீரடி யாசிரிய விருத்தம்

41. வனத்திலே சருகருந்தி வெயிலிலே கனலிலே
மழையி லேகாற்
றினத்திலே உடல்வருந்த வென்னதவம் புரிந்தாலு
மிழிவே நல்ல
தினத்திலே துறைசைவரு திருச்சிற்றம் பலசாமி
செவ்வாய் மிச்சி
லனத்திலே பத்திசித்தி முத்தியுண்டா முண்டவரே
யறவர் தாமே.

அரும்பதவுரை :

அவம் - வீண். மிச்சில் - பரிகலசேடம். புத்தி- போகம். அறவர் - ஈண்டுத் தவத்தினர். மேற்று காற்று. இனம் கொண்டல், கோடை, தென்றல், வாடை முதலியனவாம். இவரது பரிகல சேடத்தை உண்டவர் குட்டநோய் நீங்கப்பெற்ற வரலாறு காண்க.

## இன்னிசை வெண்பா

42. அறவா துறைசைக் கரசேயஞ் ஞான
மறவா வெனவழைத்தே யாண்டா யுடலு
மறைபொருளு மாவியுங்கைம் மாறாகக் கொண்டா
யிறைதிருச்சிற் றம்பலவ னே.

அரும்பதவுரை :

அஞ்ஞானம் அற வா என்க.

## கட்டளைக் கலிப்பா

43. ஏக மான பரம்பொரு ளெவ்வுரு
வெந்த வண்ண மெனக்கலை யாய்ந்துணர்
பாக மில்லி வெளிதனைக் கையினாற்
பரிசிக் கின்ற படியலை யாமலே
நாகர் போற்றுந் திருவா வடுதுறை
நமச்சி வாயர்தஞ் சந்ததி மல்கவே
தேக முந்திரு வாக்கும் படைத்தனை
திருச்சிற் றம்பல தேசிக ராயனே.

அரும்பதவுரை :

பரம்பொருள் - சிவம். எவ்வுரு - எவ்வடிவம். எந்த வண்ணம் - எந்நிறம். கலை - ஈண்டு ஆகமநூல். பாக மில்லி - வீடடையும் பக்குவமில்லாதவன். வெளி - ஆகாயம் நாகர் - தேவர்கள். சந்ததி - பரம்பரை. திருவாக்கு - உபதேசம். மல்க - தழைத்தோங்க.

## வேழம் வினாதல்

## கட்டளைக் கலித்துறை

44. தேசிக ராந்திருச் சிற்றம் பலவர் செழுங்கனகத்
தேசிக ராலயஞ் சேரா வடுதுறைத் தெண்புனல்சூழ்
தேசிக ராசல மெய்தே னிவண்வந்த தேவிளங்குந்
தேசிக ராவெனப் பற்றிய வாளி தெரியுமன்றே.

அரும்பதவுரை :

கனகம் - பொன்னாற்செய்த, தே - தெய்வத்தன்மை பொருந்திய, சிகராலயம் - சிகரத்தையுடைய கோவில். தேசி - இடத்தையுடையவளே. கராசலம் - யானை விளங்கு தேசு இகு அரா எனப்பற்றிய வாளி - உலகெங்கனும் விளங்குகின்ற ஒளியையுடைய சூரியனை வருத்துகின்ற செம்மை நிறத்தையுடைய கேதுவென்னும் பாம்பைப்போல (அவ் யானையின்மேல்) தைத்த (செம்மை நிறத்தையுடைய) கணையாற்றெரியும் என்க. தேசு பண்பாகு பெயராய்ச் சூரியனை யுணர்த்திற்று. இகுத்தல், தொழிற்பெயர் விகுதி குறைந்து இகுவென நின்றது. அரா, ஈண்டுக் கேது வென்னும் பாம்பு. இது செம்மைநிற உடையதென்பதனை, "அதிகமாங்கேது செம்மை சிகிகதிர்ப்பகையுமாகும்" என்னும் நிகண்டானறிக.

எண்சீரடி யாசிரியவிருத்தம்

45. தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்த்த வாறே
சீவன்முத் தனாக்கியிருண் மலத்தைப் போக்கி
யுரியமருந் தினிலடங்கும் விடமே போல
வூனாக்கை யுள்ளமட்டு மொடுங்க வைத்தே
பரிவின்மறு பவம்வாரா தாண்டாய் வேதப்
பழம்பொருளே வடிவெடுத்துத் தேனுமுத்தி
புரியிலுறை திருச்சிற்றம் பலவா வுன்றாள்
போற்றினேன் றுயரமெல்லாம் மாற்றினேனே.

அரும்பதவுரை :

வேதப் பரம்பொருளே - வேதத்தாற் கூறப்படும் பழம் பொருளே. வடிவெடுத்து - (அடியேங்களுய்யும் பொருட்டுத்) திருவுருவெடுத்து. தேனு முத்தி புரியிலுறை

திருச்சிற்றம்பலவா - கோமுத்தி நகரிலெழுந் தருளியிருக்கின்ற திருச்சிற்றம்பல மூர்த்தியே. (தேவரீர் அடியேன் மாட்டு) தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்த்த வாறே-யாவராலும் அறிதற்கரிய உண்மை ஞானத்தை யுபதேசித்த அக்கணமே. இருள் மலத்தைப்போக்கி- ஆணவமாகிய இருண் மலத்தைக் கெடுத்து. சீவன் முத்தனாக்கி - சீவனோடு முத்தி யடைந்தவனாகச்செய்து. உரிய மருந்தினில் அடங்கும் விடமேபோல - விடத்தை நீக்குதற்குரிய ஔடதத்தால் தன் சத்தி குன்றியிருக்கும் விடத்தினைப்போல. ஊனாக்கை உள்ளமட்டும் ஒடுங்கவைத்து -ஊனோடுகூடிய இவ்வுடல் பிராரத்த கருமநுகரும் வரையும் வாசனா மலத்தை முனைக்க வொட்டாமற் செய்து. பரிவின் மறுபவம் வாராதாண்டாய் - பயிற்சி வயத்தானுளவாகிய அன்பினால் மறு பிறப்பு வாராது, உடலூழாய்க் கழியும் வண்ணஞ்செய்து ஆண்டவனே. உன் தாள்போற்றி னேன் துயரமெல்லாம் மாற்றினேன் தேவரீர் திருவடியை வணங்கினேன் துன்பங்களையெல்லாங் கெடுத்தேன் என்க.

**எழுசீரடி ஆசிரிய விருத்தம். (கும்மி)**

46. மாற்று மருந்தொன்று கண்டேனே சென்ம
மையற் பிணிதனை யண்டேனே
தோற்றுந்துறைசையில் விண்டேனே திருச்
சிற்றம்பலவனைக் கண்டேனே
போற்ற விழிவழி வந்தானே யென்றன்
புந்தியி லென் றுமி ருந்தானே
யேற்றிடு மின்பப் பெருந்தேனே யினி
யின்னலிற் பட்டுவ ருந்தேனே.

அரும்பதவுரை :

மாற்றும் பிறவிப்பிணியை மாற்றும். விண்டேன் - யானென தென்னுஞ் செருக்கறும்படி முறையிட்டேன். ஏற்றிடும் - யாவரும் தியானிகின்ற. இன்பம் பெருந்தேன் - இனிமைமிக்க தேன் போன்றவன், இன்னல் - துன்பம் விருந்தான் - புதுமையான்.

**கொச்சகம்.**

47. தேனுமுத்தி பெறுபுரவர் திருச்சிற்றம் பலகுரவர்
ஞானசித்தி யுபதேச நலந்தருமெம் பவநாச
மானமிகு மகங்காரம் வழிவிடுமே வெகுதூர
மோநமச்சி வாயமந்த்ர மொளிதருமெம்
மிதயவெந்த்ரம்.

அரும்பதவுரை :

நலந்தரும் - இன்பந்தரும். எம்பவம்நாசம் - எம்முடைய பிறவியை நாசஞ்செய்யும். மானம் இகும் அகங்காரம் - பெருமையை நீக்குகின்ற அகங்காரமானது. வெகு தூரம் வழிவிடும் - மிகச்சேய்மைக் கண்ணே நீங்கும். அவர் கருணை கூர்ந்து செவியறிவுறுத்த பஞ்சாக்கரம் எங்கள் இதயமாகிய இயந்திரத்தின் கண் இருளைநீக்கி ஒளிவிடு மென்க.

**பாம்பு**

**சிந்து.**

48. எங்க ளுக்கொரு கட்டிக் கரும்பே நல்ல
விந்திரச் செல்வமு மொருசிறு துரும்பே
சங்கர னடியினை பாக்ய மெனச் சாற்றினன்
மறைகளின் முடிவினில் வாக்யம்
பொங்கிய துறைசையிற் கீர்த்தி மிகப் பொலிதரு

திருச்சிற்றம்பல குருமூர்த்தி
மங்கல சபைநலந் தரவே சொல் மகிழ்வுடன்
படமெடுத் தாடிக்கொள்ளரவே.

அரும்பதவுரை :

அரவே! திருச்சிற்றம்பல குருமூர்த்தி மறைகளின் முடிவாகிய உபநிடதங்களிற் கூறுகின்ற மகா வாக்கியத்தைச் சிந்தித்து இறைவனடி யடைதல் பாக்கியமெனத் திருவாய் மலர்ந்தருளினன். அவன் எங்களுக்குக் கரும்பின் கட்டிபோல்வான்; ஆதலால், இந்திரபோகம் ஒரு சிறு துரும்புக்கு நிகராம் என வினை முடிபுசெய்க.

கட்டளைக் கலித்துறை

49. அரகர வென்று மகேச்சுர பூசையி லார்க்குமொலி
சிரகர கம்பிதந் தேவர்க்குஞ்
செய்யுந் திருத்துறைசைப்
பரகர வாதுத வுந்திருச் சிற்றம் பலவவென்றார்
கரகர வென்றறுக் கும்பழ வல்வினைக் கட்டினையே.

அரும்பதவுரை :

மகேச்சுர பூசை - மகேச்சுரர்க்குச்செய்யும் பூசை, மகேச்சுரர் - அடியார்குழாங்கள், தேவரும் சிரகர கம்பி தம் செய்தற்கு ஏதுவாகிய துறைசை என்க. துறைசையின் கண் உள்ள பர என்பது விளி. கட்டு - பந்தம். கரகர - ஒலிக்குறிப்பு. ஒலியால் என விரிக்க.

சந்த விருத்தம்.

50. கட்டறுத்திடக்காண்மின மரங்காள்
பெட்ட தாங்கருள்பெற்றமுத் திப்பதிச்
சிட்ட னாந்திருச் சிற்றம் பலகுரு
சட்டஞ் செய்யுஞ் சபாபதி பூசையே.

அரும்பதவுரை :

பெற்றமுத்திப்பதி - கோமுத்திப் பதியின் கண், (ஆன்மாக்கள்) பெட்டதாங்கு அருள் - விரும்பியதாகிய பொருளை அப்பொழுதே அருளுகின்ற திருச்சிற்றம்பல குரவன் சபாபதி பூசை செய்வான் கட்டறுத்திடக் காண்மின் என வினைமுடிபு செய்க. பெட்டதாங்கு அருள் குருவென்க. சட்டம் -ஒழுங்கு. சட்ட என்னும் அகர ஈற்றிடைச்சொல் சட்டமென மரீஇயிற்று. இதனைச் சிவஞான போதம் 9-ஆம் சூத்திரம் 59-வது உதாரண வெண்பா வடியானும் உரையானும் உணர்க.

**கொச்சகம்.**

51. பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவு மக்கவடம்
பேசுவது மெய்காணப் பெற்றசைவ நன்னூலே
வாசந் திருவா வடுதுறையே யெண்ணேழு.
தேசம் பரவுதிருச் சிற்றம் பலகுருவே.

அரும்பதவுரை :

எண்ணேழு தேசம் பரவு குருவாசந் திருவாவடுதுறை அவன் பூசுவது வெண்ணீறு பூண்பது உருத்திராக்கம் திருவாய் மலர்ந்தருள்வது மெய்கண்ட சாத்திரம் என்க. மெய் காணப்பட்ட சைவ நன்னூல், "பொய் கண்டார் காணாப்புனிதமெனு மத்துவித மெய்கண்டான் நூல்."

**கட்டளைக் கலித்துறை**

52. வேதாளந் தன்னுட னாடும்பி ரான்
கொங்கை வேறொரொப்பி
லாதா ளமர்திரு வாவடு தண்டுறை யானெனக்கு
மாதா ளருடிருச் சிற்றம் பலவன் மடத்தினின்று
பாதாளம் விண்செலுங் கைத்தாள வோசை பதந்தொறுமே.

அரும்பதவுரை :

வேதாளம் - பேய். கொங்கை வேறொ ரொப்பிலாள் - ஒப்பிலாமுலையாள். பிரானும் ஒப்பிலாமுலையானுந் தங்கிய திருவாவடுதுறையானும் திருச்சிற் றம்பலனுமாகிய குருமூர்த்தியென்க. மடத்தில் பூசாகாலந்தோறும் கைத்தாளத்தி னின்றெழு மோசை பாதலத்தினும் மீதலத்தினுஞ் செல்லும் என வினைமுடிவு செய்க. நின்றும் என்பதனைக் கைத்தாளத்தினோடுங் கூட்டுக. பதம் - பூசைக்காலம். வீடுபேற்றையருளலின் மாதா ளென்றார்.

## சந்த விருத்தம்

53. பதத்தைக் கண்டவர் பழித்துச் சண்டனை
விதிக்கத் தந்தமை வியப்பத் தங்குவர்
திதிக்கக் கண்டரு திருச்சிற் றம்பல
வெதிக்குத் தொண்டென வினைப்பற் றுய்ந்தரோ.

அரும்பதவுரை :

திதிக்கு - காத்தற் றொழிலையுடைய விண்டுவுக்கு, அக்கண் தரு (முன்னருச்சித்த) கண்ணைக்கொடுத்தென்க. இதனை, "அத்திதியு மாதியு மா மங்கு" என்னும் சிவஞான போதம் முதலாவது சூத்திரம் நாலாவது உதாரண வெண்பாவடியானும் அதன் உரையானும் உணர்க. திருமாலுக்குக் கண்ணருளிய திருச்சிற்றம்பல தேசிகருக்கு அடியானென்று கூறி அவர் திருவடியை யடைந்தவர் (பிறப்பினால்வரும்) இளைப்பு நீங்கி நடுவனைப் பழித்து ஆக்குந் தொழிலுடைய அயன் வியக்கும்படி முத்திவீட்டின் கண் தங்குவாரென முடிவுசெய்க. எதி - முனிவர்.

## கட்டளைக் கலித்துறை.

54. உய்வது நல்குவ தும்பசு பாச மொழிப்பதனைச்
செய்வது மாந்திருச் சிற்றம் பலவர் திருத்துறைசைச்
சைவ துலிய ரெதிராச ரள்ளித் தருந்திருநீ
றெய்வது பெற்ற கணைபோற் றொடர்தந் திருமைக்குமே.

அரும்பதவுரை : சைவதுல்லியர் - சிவத்தினை நிகர்த்தவர். திருநீறு எழுவாய். இருமை - இம்மை மறுமை. உய்வதை நல்குவதும் பசுபாசம் ஒழித்தலைச் செய்வதுமா மென்க.

## குறளடி வஞ்சிப்பா

55. இருமைத்துய ரிடைத்தங்கினர்
திருமெய்த்திருச் சிற்றம்பல
குருவைப்பதங் கொண்டேத்திடில் நாளும்.
அரியய னுலகினு மனையார்
பெரியதோர் முத்தி பெறுகுவர் விரைந்தே.

அரும்பதவுரை : இருமைத்துயர் - பிறப்பிறப்புக் காரணமாக வருந்துன்பம். திருமெய் - அழகிய திருவுரு, பதம் - காலம்.

## நேரிசை வெண்பா

56. விரையார் பொழிற்றுறைசை மேனகரிற் செல்ல
விரையார் திருமடத்தின் மேவார் - நரகுறுவர்
தீக்கை மறைத்ததிருச் சிற்றம் பலகுரவர்
தீக்கை நலமறியா தே.

அரும்பதவுரை : தீகை - கையிலுள்ள நெருப்பு. தீக்கை- (சஞ்சிதவினையைப் போக்கச் செய்யுந்) தொழில். நலம் - இன்பத்தை. அறியாது - அறியாமல். துறைசைக்கு விரைந்து செல்லாதவரும், மடாலயத்தைச் சாராதவரும் நரகுறுவர் என்க.

### கட்டளைக் கலித்துறை

57. தேவாரம் பூசை தனிலோது வாரிசை தெய்வநல்யாழ்ப்
பாவாருந் தும்புரு நாரதர் கற்பப் பயிலுமிடம்
ஆவாரு முத்தி புரத்தா ரடியார்க் கருள் புரிதல்
ஓவார் புகழ்த்திருச் சிற்றம் பலவ ருறைமடமே.

அரும்பதவுரை :

கோமுத்தி நகரின் எழுந்தருளியவரும் தம்மை அடுத்த அடியார்க்கருள் செய்தலில் நீங்காதவருமாகிய திருச்சிற்றம்பலவரென்க. அவருறைவிடம் தேவாரப் பண்ணிசையைத் தும்புரு நாரதருங் கற்றுக்கொள்ளத் தங்கு மடமென முடிக்க. ஆ ஆரும் முத்திபுரம் - கோமுத்திபுரம்.

### எண்சீரடி யாசிரிய விருத்தம்

58. உறையிடுதற் காகுமோ மனமே யாழி
யுயர்கரையின் சிறுமணல்கண் முன்னாணம்மைச்
சிறையிடுமுற் பவத்தினுக்கு வீணே யன்றோ
செழுந்துறைசைத் திருச்சிற்றம் பலவர் தாளின்
முறையிடுகும் பிடுகிடைக்கு மோதா னென்று
முன்னுவாய் பின்னமக்கு நமனார் வந்து
திறையிடுவர் கண்டுகொளச் சமயந் தேடித்
தியங்குவார் நம்மாணைக் கியங்கு வாரே.

அரும்பதவுரை :

மனமே! கருப்பமாகிய சிறையின்கண் நம்மையிட்ட பிறவியினைக் கணக்கிடுவதற்குக் கடற்கரையின் கண்ணுள்ள சிறுமணல்கள் அமையுமா? அமையுமெனக் கோடல் வீணாகுமன்றோ என்க. துறைசையின் கண்ணுள்ள திருச்சிற் றம்பலவர் தாளில் முறையிடுவாய்.

அவர் திருவருள் கிடையா நிற்கும். பாவியாகிய எனக்கு இத் திருவருள் கிடைத்தது என்ன ஆச்சரியமென்று அவர் பெருங்கருணைத் திறத்தைத் தியானிப்பாய். அப்படி தியானிப்பாயாயின், நமனார் திறையளப்பர் கண்டுகொள்ள அமையம் பார்த்து வருந்துவர். நங் கட்டளையின் வண்ணம் நடப்பரென வினைமுடிபு செய்க. உறை - பேரெண்ணைக்குறிக்கும் ஒரு குறியீடு. இதனை நெற் களங்களில் கண்கூடாகக் காணலாம்.

உற்பவம் - பிறப்பு. முறையிடு கும்பிடு என்பன ஆய் விகுதி புணர்ந்து கெட்ட முற்றுக்கள். கிடைக்கும் செய்யுமென்முற்று. ஆ- வியப்பிடைச் சொல் திறை-கர்ப்பம். ஆணை ஆக்கினை.

**நேரிசை வெண்பா.**

59. வாரும் புலவீர் மயலா ணவதிமிரம்
பேரும் புலவீர் பிறவிநோய் - தீருந்
திருத்துறைசை மேவுதிருச் சிற்றம் பலசற்
குருத்தனது பொன் மடத்துக் கு.

அரும்பதவுரை :

புலவீர் மடத்துக்கு வாருங்கள் மயக்கத்தைச் செய்கின்ற ஆணவ இருள் நீங்கும், பிறப்பாகிய நோய் நீக்குமென்க. ஆணவதிமிரம். பண்புத்தொகை. வாரும் முன்னிலை வினைமுற்று. புலவீர் இரண்டும் விளி. இது விற்பூட்டுப் பொருள்கோள்.

### ஆனந்தக்களிப்பு

60. ஆனந்த மானந்தம் பாரீர்
குருசாமி கோமுத்தி வாசர் - சபைக்
கூத்தப்பிரானடி யேந்திய நேசர்
தருவாய்மெய்ஞ் ஞானப்பிர காசர்- இந்தத்
தரணி யெங்கும் பணியெதி ராசர்
திருநீறு தானருள் கையர் - திருச்
சிற்றம் பலவர்சை வாகமத் தையர்
கருநாச மேபுரி துய்யர் - பதங்
காணாதவீணர்க ளோமுழுப் பொய்யர் (ஆனந்தம்)

அரும்பதவுரை :

தருவாய் - (அடியார் வேண்டியதை வேண்டியாங் கருளலின்) கற்பகத்தருவின் தன்மைவாய்ந்த. கரு- சென்மம்.

### மடக்கு
### கட்டளைக்கலிப்பா

61. பொய்கை வாளை பொருவன பூகமே
பொங்க ரெங்கும் புகும்விரும் பூகமே
வெய்ய வன்கதிர் மாறவ ரம்பையே
மேவு மேதழை மீறவ ரம்பையே
யெய்ய வம்புக ளைச்சிலைக் காமனே
யெடுக்க வோங்குங்கு யிற்சிலைக் காமனே.
செய்யன் சேர்துறை சைக்கர சிங்கமே
திருச்சிற் றம்பல தேசிக சிங்கமே.

அரும்பரவுரை :

வாளை - ஒருவகை மீன். பூகம் - கமுகு, ஊகம் - கருங்குரங்கு. வாழைகள் தழை செழித்து அதிகரித்த வால் சூரியன் கதிர் வெப்பத்தின் அளவு நீங்கப் பொருந்து மெனக் கொள்க. வரம்பு - அளவு. மாற என்பது செயவெனெச்சம் காரணப்பொருட்டு. காமன் அம்புகளை எய்ய எடுக்க சோலையின் கண் குயிலோசை மிக அதிகரிக்கும் எனக்கூட்டுக. குயிற்சிலை-குயிலோசை. கா-சோலை. மன்-மிகுதி. செய்யள்-இலக்குமி. கரசிங்கம் - திருக்கரத்தையுடைய சிங்கம். யானையாளி என்பர்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்

62. சிங்காச னாதிபதி திருத்துறைசை
யூராளி செகத்தோ ரெல்லா
மங்காம லுபதேசம் புரிதிருச்சிற்
லம்பலவன் வண்மை பாரீர்
சங்காழி மாயவனு மறியாத
திருவடியைத் தந்தான் மற்றை
வெங்கானிற் றுரும்பனைய வெனைக்கொண்டா
னிதுவுமொரு விளையாட் டாமே.

அரும்பதவுரை :

எனையுங் கொண்டான் என்னும் உம்மை விகாரத் தாற்றொக்கது.

## நேரிசை வெண்பா

63. ஆமென்றா ராதியா மல்லற் பிறவிநமக்
காமென்றார் யாவரையு மல்லவென்றார் - போமென்
றுருமறைக்குஞ் சோலை யுவர் துறைசைத் தேவாய்
வருதிருச்சிற் றம்பலவர் வந்து.

அரும்பதவுரை :

திருச்சிற்றம்பலவர் யாம் ஆதிஆம் என்பர். (காதலினாலே) எல்லாவற்றிற்கும் முதற்காரணமாகிய பிரமம் யாமாவோம் என்று சொல்கின்றவர் அல்லல் பிறவி நமக்கு ஆம் என்பர் - (இங்ஙனங் கூறல் பசு ஞானமாதலால்) துன்பத்தைத் தருகின்ற பிறவியானது நமக்கே உரிதாகும் என்றாரவர். யாவருக்கும் பிறவியானது நமக்கே உரிதாகும் என்றாராவர். (இங்ஙனங்காதலினால் நான் பிரமமென்று சொல்வார் யாவருக்கும் பிறவி நீங்காதாகலின்) யாவரையும் அல்ல வென்றார். - தமக்கடிமையாகாரென்று கூறினார். போம் என்று உரு மறைக்கும் - செல்கின்ற சூரியனது வடிவை மறைக்கும்.

கட்டளைக் கலித்துறை

64. வந்தா ரொருமுழு ஞானக் கதிரென மன்னிடவு
வந்தார் திருவாவடுதுறை தன்னிலென் வன்மனத்தே
தந்தார் படமென்னு மாயா விருத்திகள் சாயநலந்
தந்தார் புகழ்திருச் சிற்றம் பலவர் தடையறவே.

அரும்பதவுரை :

திருவாவடுதுறை தன்னில் ஒரு முழுஞானக் கதிரென வந்தார் புகழ் திருச்சிற்றம்பலவர் என் வன்மனத்தே மன்னிட உவந்தார் தந்தார் படமென மாயா விருத்திகள் சாயத் தடையற நலந் தந்தாரென வினை முடிபுசெய்க. முழுஞானக்கதிர் - நிறைந்த ஒளியையுடைய ஞான சூரியன். மன்னிட - நிலைபெற. உவந்தார் - விரும்பினார். மாயா விருத்திகள் - மாயா சம்பந்தமான செயல்கள்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்

65. தடத்திலே கயல்பாயுந் தேனுமுத்தி
புரவரசர் தமிழ்க்கு முன்னாட்
கடத்திலே வருமுனிவர் புகழ்திருச்சிற்
றம்பலவர் கருணைப் பார்வை
யிடத்திலே வசமாகி வலத்திலே
வந்துபணிந் தென்றும் வாழும்
மடத்திலே யிருந்தவருக் கொருக்காலு
மில்லையில்லை மடங்கண் டீரே.

அரும்பதவுரை :

கடம்-கும்பம். மடம் - அறியாமை. வலத்திலே வருதல்-வலம் வருதல்.

## நேரிசை வெண்பா

66. கண்டுபணி வார்க்குக்கற் கண்டு தவமெல்லா
மண்டு புகழ்த்திருச்சிற் றம்பலவர் - முண்டகத்தாள்
பாச மகற்றும் பரஞ்சோதி மேவுகயி
லாசமது சர்வமான் யம்.

அரும்பதவுரை :

திருச்சிற்றம்பலவர் முண்டகத்தாள் பணிவார்க்குக் கற்கண்டு; அது பாச மகற்றும் பரஞ்சோதி மேவு கயிலாயம், சர்வமானியம் ஆகுமெனக் கொள்க. சர்வமானியம் - வேறொருவர்க்கின்றித் தாமே யனுபவிக்கும் இறையிலி நிலம். மண்டு தல் - செறிதல்.

## தாழிசை

67. மானேர் விழி யார்மேலழல் வாயோடிய பறவை
மதிபோன்மன மயலாலுழன் மாசற்றிட வடிமை
நானேயெனத் தானாட்கொளு நாதன்னெனைச் சிலையி

னார்வாங்கிய தெனச்செய்தரு ணலமென்னென நவில்வேன்
கோனேயொளி யானேயுயர் கோமுத்தி புரத்துக்
கொருவாவளர் தருவாகிய கொடையாய்விழி யிடையார்
தேனேதவ வடிவேசெழுந் திருவேயரு ளுருவே
சித்தஞ்சிவ மாக்குந்திருச் சிற்றம்பல குருவே.

**அரும்பதவுரை :**

அழல் வாயோடிய பறவை -அக்னியில் விழும் விட்டில். மதி - புத்தி, இதனைச் "செழுகின்ற தீப்புக்குவிட்டிலின்" என்னும் திருவாசகத்தா னுணர்க. சிலையினார் வாங்கல் - கல்லின் நாருரித்தல், விழியிடையார் - என்னிரு கண்ணினும் பொருந்தி இருக்கும். சித்தம்- ஈண்டு ஆன்மா. சிவமாக்குதல் சிவமாந்தன்மைப் பெருவாழ்வளித்தல், இதனைச் "சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்" என்னும் திருவாசகத்தானுணர்க.

**கட்டளைக் கலித்துறை**

68. குருவெள்ளி நேர்திருச் சிற்றம்
பலர்பலி கூர்ந்துசெய்ய
மருவெள்ளி னெய்யெனு மன்பினன்
முத்துக்கு மாரன்றந்த
வொருவெள்ளித் தேர்கயி லாச தரிசன
மொத்திருக்குங்
கருவெள்ளி நீக்கு நடராசன்
றன்திருக் கண்ணருளே.

**அரும்பதவுரை :**

குரு - வியாழன். வெள்ளி - சுக்கிரன், பலிகூர்ந்து செய்ய - நித்திய பூசை அன்புமிக்குச் செய்ய மருவு எள்ளின் நெய்யெனும் அன்பினன் - பொருந்துகின்ற எள்ளின்கண்

நிறைந்து நிற்கின்ற நெய்போலக் கலந்து நிற்கின்ற அன்பினையுடையான். அத்தேரின் கண் எழுந்தருளிய நடராசர் திருக்கண்ணருள் தெரிசித்தோர் கருவை யிகழ்ந்து நீக்குமென்க.

அறுசீரடியாசிரிய விருத்தம்

69. அருள்படைக்குங் கண்ணுடையானைம்படைப்புன்
காமனைவென் றடர்த்து ஞானப்
பொருள்படைக்குத் துறைசைவரு திருச்சிற்றம்
பலகுரவன் பூந்தாள் போற்றி
னிருள்படைக்கு மாணவத்தை யெற்றும்வினைச்
சுற்றையெல்லா மிரிக்கு முள்ளந்
தெருள்படைக்கு மமர்புரியுஞ் சண்டனுமுண்
டகனுநம்மைச் சேவிப் பாரே.

அரும்பதவுரை :

அருள்படைக்கும் கண்களையுடையவனும், ஞானப்பொருள் படைத்தவனும் ஆகிய திருச்சிற்றம்பல குரவன்தாளை வணங்கினால் அத்தாள்கள் ஆணவத்தை எற்றும், வினைக்கட்டையறுக்கும், ஆன்மா தெளிவுற்று அருள்வடிவாம். படைக்கும் பிரமனும் போர்செய்யும் இயமனும் வணங்குவர் எனக்கூட்டுக. உள்ளம் - ஆன்மா. சண்டன் - இயமன். முண்டகன் -பிரமன்.

கட்டளைக் கலித்துறை

70. சேவினைப் பின்பு சிவிகைய
தாக்கித் திருத்துறைசை
மேவி யெழுதிருச் சிற்றம்
பலவர் வியன்மடத்திற்
கூவி யமுது கொளுமென்ப

தால்விண் குடியிருப்பை
யோவி யமரரு மானிட
ராய்வர வுன்னுவரே.

அரும்பதவுரை :

இறைவனே ஆன்மாக்க ளுய்யும் பொருட்டுத் திருச்சிற்றம்பலவராகத் திருவுருக்கொண்டா னென்பர் சேவினைச் சிவிகையதாக்கி என்றார். அமுது-உணவு அமிர்தம்.

**நேரிசை வெண்பா.**

71. ஏடவிழும் போத ணிருங்கை நமன்கால்கள்
சேடன் முடிகள் சிவப்பாறு - நீடுயிர்க்குத்
தேற்ற முதவுதிருச் சிற்றம் பலகுரவன்
சாற்று முபதேசத் தால்.

அரும்பதவுரை :

திருச்சிற்றம்பல குரவர் உபதேசம் ஆன்மாக்களை முத்தியிற் சேர்த்தலால் படைக்குங் கரமும், சங்கரிக்க நடக்குங் காலும், ஆன்மாக்களைச் சுமக்குந் தலையும் அத்தொழிலின் நீங்கலால் வருந்துத லின்றாமென்க.

**மடக்கு**

கொச்சகக் கலிப்பா.

72. தாலத்தில் வடுத்தனையே தான்றவிர விடுத்தனையே
காலத்தே மருவுளமே கருவிலே திருவுளமே
சீலத்தா ரொருவரையே திருச்சிற்றம்பல வரையே
கோலத்தூற் சிந்தனையே கொண்டன்பாற் கசிந்தனையே.

அரும்பதவுரை :

வடு-குற்றம். உளமே காலத்து மருவு - மனமே காலமிருக்கும்போதே தீக்ஷா குருவினிடத்துப் பொருந்துவாய். கருவிலே திருவுளம் - கருப்பத்திலேயே செல்வச் சிறப்புடையேம். சீலத்தா ரொருவரை - ஒழுக்கத்தால் ஒப்பற்றவரை குணத்தால் ஒரு மலை போன்றவரை யெனினுமமையும். "காலமுண்டாகவே காதல் செய்துய் மின்" என்பது திருவாசகம்.

**நேரிசை வெண்பா**

73. தனையடைந்தாற் காயந் தனையறுப்பா னென்னை
யுனைமனமே வாய்பேச வொட்டான் - றனியே
தெருள்சோதி யானதிருச் சிற்றம் பலவ
னருளாசா னென்பதெவ்வா றாம்.

அரும்பதவுரை :

ஏகனாகித் தெளிந்த சோதி வடிவாகிய திருச்சிற்றம்பல குரவன் (ஆன்மாக்கள்) தன்னை வந்தடைந்தால், காயந்தனையறுப்பான் - அடைந்தவர் காயத்திற் கொள்ளும் யானென்னுஞ்செருக்கைப் போக்குவான். மனமே! உனை சங்கற்பஞ்செய்யும் உன்றொழிலொடு வாக்கு இந்திரியத்தின் றொழிலாகிய வசனித்தலையும் நிகழவிடான். என்ன ஆச்சரியம்! இங்ஙனம் செய்கின்ற இவனை அருளோடு கூடிய பரமாசாரியனென்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? தனி - ஏகம். தெருள் - தெளிவு. காயத்தை யானெனக் கொள்ளுஞ் செருக்கினை யறுத்தலை உபசார மாகக் காயந்தனை அறுத்தென்றார்.

கட்டளைக்கலிவெண்பா

74. ஆருஞ் சென்னியி லஞ்சுகொத் தாகிய
வக்க மாலையு நெற்றியின் மேலொளி
சேரும் வெண்பொடி பூச்சுங் கருணையே
செய்யும் பார்வையும் வெண்ணகை யுங்குழை
யூருங்குண்டல மும்மணி மாலைதா
முரமுங் கையிற் செபவடந் தாங்கிய
சீருங் கண்டுகண் பேறடைந் தேனின்று
திருச்சிற் றம்பல தேசிக ராயனே.

அரும்பதவுரை :

சென்னியின் ஆரும் - தலையிற் பொருந்தும், அக்க மலை - உருத்திராக்கத்தாலாகிய அஞ்சுகொத்துத் தாழ்வடம். கண்பேறு - கண்ணினைப்பெற்றதாலாகிய பயன்.

**நேரிசை வெண்பா**

75. தேறுசுத்தி வெள்ளியெனச் சேரு மயக்கமற
வாறுசுத்தி யாற்சிவத்தோ டாக்கினான் - கூறுதிருச்
சிற்றம் பலகுரவன் றேடி யெனைப்பிறவி
யிற்றம் பலவென் றிட.

அரும்பதவுரை :

தேறு- சுத்தம். சுத்தி - கிளிஞ்சில். ஆறுசுத்தி - ஆறத்துவாக்களையுஞ் சுத்தஞ்செய்தல். ஆறத்து -வாக்களாவன : -மந்திரம், பதம், புவனம், வன்னம், தத்துவம், கலைஎன்பனவாம் பிறவியிற்று - பிறவி கெட்டு. அம்பல என்றிட - அம்பலவ என்று யாங்கள் சொல்லா

நிற்க. தேறுசுத்தி வெள்ளியென - சுத்தியில் வெள்ளி அத்தியாச மாகத் தோன்றியதுபோல. சேரும் மயக்கம் அற-ஆன்மாக்களாகிய எங்களிடத்துள்ள அத்தியாசமாகத் தோன்றிய மயக்கம் நீங்க. அத்தியாசம் - ஒரு பொருளை மற்றொரு பொருளாக உணர்தல். திருச்சிற்றம்பல குரவன் எமைத் தேடிப்பிறவியிற்று யாங்கள் அம்பலஎன்றிட மயக்கமற சுத்தியால் சிவத்தோடாக்கினான் என வினை முடிவுசெய்க.

## அறுசீரடியாசிரிய விருத்தம்

76. இடரேது மினியில்லைப் புள்ளிருக்கு
வேளூரி லென்றுங் கோது
படராத துறைசைநமச் சிவாயருக்கு
முன்னின்ற பரமர் தம்மை
நடராச ரொடுபூசை திருச்சிற்றம்
பலவர்செயு நாளி லோர்நாள்
விடரேனுந் தவரேனுந் தரிசித்தால்
வினைகளெல்லாம் வீடுந் தானே.

அரும்பதவுரை :

கோது - குற்றம். ஸ்ரீ நமசிவாயமூர்த்தி புள்ளிருக்கு வேளூர் ஆலயத்திற் சென்று சித்தாமிர்த தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணியபோது அத்தீர்த்தத்திலிருந்து படிகலிங்கம் கிடைத்தது. அதுவே வைத்தியலிங்கம். அவ்விலிங்கத்தை இவ்வாதீனத்தில் ஸ்ரீ நமசிவாயமூர்த்தி முதலாகவரும் குருமூர்த்திகளெல்லாரும் உடையவராக வைத்துப் பூசித்து வருகின்றார்கள். விடர் - காமுகர். தவர் - தவத்தினர்.

## விருத்தம்.

77. வீட்டுநூ லருள்புரிந்த துறைசை நாதர்
விளம்புமறம் பொருளின்ப மிவற்றை யாய்ந்த
தேட்டுநூல் சிறப்பல்ல வென்னச் சொன்ன
திருச்சிற்றம் பலகுரவன் றாள்சே ராமல்
காட்டுநூல் பலபார்த்துப் பயனென் கண்டீர்
கருத்திலீர் பருத்திநூல் விலைக்காம் வீணே
ஏட்டுநூல் பிரிப்பதுஞ்சேர்ப் பதுமாய் வாணா
ளிகந்திட்டீர் துன்பமே முகந்திட்டீரே.

அரும்பதவுரை :

கருத்திலீர் - செய்வதுந்தவிர்வதும் இன்னதென அறியும் எண்ணமில்லாத உலகீர். வீட்டினை உணர்தற் கேதுவாகிய ஞானநூலினைத் திருவாய்மலர்ந் தருளிய துறைசை நாதரும், உலகத்தாராற் புகழப் படுகின்ற அறம் பொருளின்பமாகிய இவைகளை ஆராய்தற்குக் காரணமாகிய தெளிந்த நூல்கள் சிறப்புடையன அல்ல எனச் சொன்ன திருச்சிற்றம்பலவருமாகிய பரமாசாரியர் திருவடியைச் சாராமல் (இவ்வறம்பொருளின் பங்கள்நிலைபெறுதற்கு) பலகாட்டுநூல் - பல உதாரணநூல்களைப்பார்த்து என்கண்டீர் - என்ன பயனைக்கண்டீர். பருத்திநூல்-பருத்திநூலாயின். வாழ்நாள் - வாழ்நாளின் கண். வீணே - வீணாக. ஏட்டுநூல் விரிப்பதும் சேர்ப்பதுமாக இகந்திட்டீர் (ஆதலால்) துன்பத்தை முகந்து கொண்டீராவீரென்க. தெளிவு எனப்பொருள் தரும் தட்டெனும் சொல் தேட்டென விகாரமெய்தி நின்றது. தெட்டென்பது இப்பொருளில் வருவதை "மானமாலழகர் பதிகனூற்றெட்டே, மற்றவை யாவு நூற்றெட்டே" என்னும் அழகர் கலம்பகத்தானுணர்க. காட்டு - உதாரணம்.

## வஞ்சி விருத்தம்

78. முருக்கித் திண்பவ மோதியே
கருச்சுற் றம்பல காதினா
னொருக்கித் தொண்டரை யோகைசேர்
திருச்சிற் றம்பல தேவனே.

**அரும்பதவுரை :**

ஓகை - உவகை, ஒருக்கி - அடக்கி, தொண்டரை வேற்றுமை மயக்கம். பலகருச்சுற்றம் - பலவாகிய கருப்பாசயப்பையின் கூட்டம், பாவம் - பிறப்பு, முருக்கிகெடுத்து, காதினான் -ஈண்டு நீக்கினான்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்

79. தேவராய்ப் பிறந்தாலென் மானிடராய்ப்
பிறந்தாலென் செகத்தி லேபின்
யாவராய்ப் பிறந்தாலென் னிருவினைக்கீ
டாயெடுத்த தாக்கை யன்றோ
தாவரா திகளேனுந் திருச்சிற்றம்
பலகுரவன் றாள்க டீண்ட
மேவரா நின்றபா துகையாகி
யவர்முடிமேல் விளங்குந் தானே.

**அரும்பதவுரை :**

தாவரம் - புல் மரம் முதலியன. பாதுகை - திருவடி நிலை.

## கட்டளைக் கலித்துறை.

80. தானமிலாரைத் தருவென்று பாடித் தளர்ந்துமிக
வான மிலாத பயிரென்ன வாடு மடப்புலவீர்
ஊன மிலாத்திருச் சிற்றம் பலவ ருயர் துறைசை
யீன மிலாப்புகழ் பாடிற் கொடுப்ப ரிருமையுமே.

அரும்பதவுரை :

தானம் - மழை. ஊனம் - குறைவு, இருமை இம்மை மறுமைப் பயனென்க.

### வெண்பா

81. இருவினையுஞ் சித்தல்ல வென்றாய் தொடர்ந்து
வருவதெவனான்மா மலத்தன் - தெரிதரான்
கற்றும் பயனறியேன் கண்மணிபோ னண்ணுதிருச்
சிற்றம் பலகுரவே செப்பு.

அரும்பதவுரை :

கண்ணின் மணிபோன்று என்பாற் பொருந்திய திருச்சிற்றம்பல தேசிகரே! பல நூல்களைக் கற்றும் அந்நூற் பயன[றி]யாத எளியேனுக்கு இருவினைகளுஞ் சட[மெ]ன்றீ[ர்]! தேவரீர் திருவாய் மலர்ந்தருளியபடி சடமேயா[த]ல் அவ்விளைகள் ஆன்மாக்களை விடாதுபற்றி இத்துன்பத்தை யாக்கிவருவதற்குக் காரணமென்னை? அங்ஙனஞ் சடமே யாயினும் இறைவன் இயக்க அவ்வினைகள் இயக்குமென்பதனை ஆன்மா ஆணவமல சம்பந்தத்தையுடையவனாதலின் தெரியா னென்க.

குருவே! பயனறியேனுக்கு சித்தல்ல வென்றாய் தொடர்ந்து வருவது எவன் செப்பு. ஆன்மா மலத்தான் தெரிதரான் என வினைமுடிபு செய்க.

### கட்டளைக் கலித்துறை

82. செப்புவ துன்புகழ் காண்ப துனது திருவுருவ
மொப்புவ துன்னுரைக் குற்றேவல் பொல்லா வுடற் பிறவி
தப்புவ தாந்திருச் சிற்றம் பலகுரு சாமிமெய்ம்மே
லப்புவ துந்தரும் வெண்ணீ றடியனுக் காவனவே.

அரும்பதவுரை :

உடற்பிறவி தப்புவதாந் திருச்சிற்றம்பல குருசாமி பிறப்பிலியாகிய திருச்சிற்றம்பல குருவே. ஒப்புவது யானுடன்பட்டியற்றிவது என்க. குருமூர்த்திகள் வெண்ணீற்றை அடியார்கள் நெற்றியில் பூசுவதும் கையிற் கொடுப்பதும் மரபு.

எண்சீர் கழிநெடிலடியாசிரியர் விருத்தம்.

83. ஆக்கைமுதற் கண்டனநீ யல்லை யென்று
மறியாத கழிபரநீ யல்லை யென்றுந்
தூக்கியவ னின் றகலப் பாலே எண்ணிச்
சோகமெனப் பாவிக்கச் சொன்ன தாலே
பாக்கியம்பெற் றேன்கருட தியானத் தாலே
பன்னகநஞ் சொழிவதென விமல மானேன்
காக்குமருட் டிருச்சிற்றம் பலவா பாரிற்
கைம்மாறு மழைக்கெவரே கருது வாரே.

அரும்பதவுரை :

காக்குமருட் டிருச்சிற்றம்பலவா - பிறவியாகிய சாகரத்தில் வீழ்ந்த எங்களைக் கருணைக்கையால் எடுத்துக் காக்குந் திருச்சிற்றம்பல குரவனே. ஆக்கைமுதல் கண்டன நீ அல்லை என்றும் -(சுட்டுணர்வுட்பட்டு) உடம்பு முதலாகக் காணப்பட்டவனாகிய பாசக்கூட்டம் ஆன்மாவாகிய நீ யன்றென்றாய்; அறியாத கழிபரம் நீயல்லை யென்றும் - (சுட்டுணர்வினால்) அறியப்படாத மேம்பட்டு நின்ற அப்பதிப் பொருளும் நீயன்றென்றும் திருவாய் மலர்ந்தருளிப் பாசத்தை நீக்கி, அவன்நின்ற கலப்பாலே-(பதிப்பொருள் வேறாயினும் வியாபக

வியாப்பிய பாவத்தால்) கண்ணொளியும் ஞாயிற்றினொளியும் வேற்றுமையின்றி ஒற்றித்து நிற்றல் போல். இறைவன் ஒன்றித்து நின்ற கலப்பினையும். தூக்கி எண்ணி-ஆகம அளவை யானும் அனுபூதி வகையானும் ஆராய்ந்து கருதி. சோகமெனப்பாவிக்கச் சொன்னதால் - (கருடோகம் பாவனைபோல) சிவோகம் பாவனையைச் செய்வாயென்று திருவாய் மலர்ந்தருளியதால். கருடதியானத்தால் பன்னக நஞ்சு ஒழிவதென விமல மானேன் - அக் கருடன் தோன்றி விடத்தை நீக்கித் தெளியச் செய்யுமா போல இறைவனும் என்பால் அத்துவிதமாய் நின்று மலங்களை நீக்கச் சுத்தனானேன். பாக்கியம் பெற்றேன் - ஆதலால் இவ்வுலகில் ஒருவரும் பெறாத பாக்கியம் பெற்றேன். பாரில் - இப் பூமியின்கண் மழைக்கு- பயன் கருதாது பெய்யும் மேகத்துக்கு. கைம்மாறு - பிரதிப்பிரயோசனத்தை. எவர்.-யாவர். கருதுவார் - சிந்திப்பார்கள். ஆகலான் நீ செய்த இப்பெருங்கருணை யான் என்ன கைம்மாறு செய்யவல்லேன். ஆதலால் என்பதுமுதல் இசையெச்சம். இச் செய்யுளின் கருத்தை "கண்டவிவை" என்னும் முதற்குறிப்பையுடைய சிவஞானசித்தித் திருவிருத்தத்தா னுணர்க.

### நேரிசை வெண்பா

84. கருதாதாய் காலங் கழித்தனையே நெஞ்சே
யொருதாதாய் கோமுத்தி யூராய் - பெருகுதவந்
தீராமை யாற்றுதிருச் சிற்றம் பலவென
வாராமை யாற்றுதிக்க லாம்.

அரும்பதவுரை :

நெஞ்சே - மனமே. கோமுத்தியூராய் - கோமுத்தி புரத்தில் வசிப்பவனே. பெருகு தவம் - நாளுக்குநாள் அதிகரிக்கின்ற தவத்தை. தீராமை ஆற்று - நீங்காமற் செய்கின்ற. திருச்சிற்றம்பலவ என - திருச்சிற்றம்பல தேசிகனே என்று.

கட்டளைக் கலித்துறை

85. ஆவிக் கலைவில்லை யாக்கை யகத்து ளருவமதாய்
மேவிக் கலையெனத் தாவு மனம்வல் வினைவிளைக்குங்
காவிக் கலையுடை மாதவர் கோமுத்தி காட்டுநகர்த்
தேவிக் கலைதிருச் சிற்றம் பலவரைச் சேர்ந்துய்ம் மினே.

அரும்பதவுரை :

உலகீர்! யாக்கை யகத்துள் - உடம்பினகத்தே அருவமதாய் - கண்ணிந்திரியத்திற்கு விடயமாதலின்றி. மேவி - பொருந்தி. கலையென - குரங்கினைப் போல தாவும் - ஒன்றினைவிட்டு ஒன்றினைப் பற்றுகின்ற. மனம் - மனமானது. வல் - வலிய. வினை - வினைகளை. விளைக்கும்- விளைவியாநிற்கும். (ஆதலால்) தேவி - உமையம்மை. தேவியரையும் கலைமானையும். காவிக்கலையுடை மாதவர் - கல்லாடைபுனைந்த பெரிய தவத்தினையுடையவர். திருச்சிற்றம்பலவர் - திருச்சிற்றம்பலவருமாகிய பரமாசாரியரை. சேர்ந்து - இடைவிடாது தியானித்து. உய்மின் - பிழையுங்கள் (இங்ஙனஞ் செய்யின்) ஆவி - உங்களுயிருக்கு - அலைவில்லை - வருத்தமில்லையாம்.

### அறுசீரடி யாசிரிய விருத்தம்.

86. மின்னார் தில்லை வாழவரு
வேதத் தலைவர் செங்கமலப்
பொன்னார் கொற்றங் குடியார்தம்
பூசைக் குகந்த சபாபதியைத்
தென்னா வடுதண் டுறையர் திருச்
சிற்றம் பலவ ரருச்சனைப்போ
தென்னா ரமுதே யெனத்தலைகை
யெடுப்பார் பிறவி தடுப்பாரே.

அரும்பதவுரை :

கொற்றங்குடியார் - முதலில் சிதம்பரத்திலிருந்து பின் அதற்கடுத்த கொற்றவன் குடியிலெழுந்தருளியிருந்த உமாபதி சிவாசாரியார். இவர் பூசைசெய்த நடராசரைத் தான் இவ்வாதீனத்தில் அந்நாள் முதல் இந்நாள் வரையும் ஆசாரியர்கள் பூசை செய்து வருகின்றார்கள். நடராசரன்றிச் சிவகாமியம்மையும் திருச்சிற்றம்பல முடையாரென்னும் சிவலிங்கப் பெருமானும் அவ்வுமாபதி சிவாசாரியர் பூசை செய்த மூர்த்திகளே. அவ்விருமூர்த்திகளையும் கூடவே வைத்துப் பூசைசெய்து வருகின்றமை காண்க.

### அறுசீரடி யாசிரிய விருத்தம்

87. பாரெலாம் படைத்தாலு மகபதிபங்
கயனெடுமால் பதியி லுள்ள
சீரெலாம் படைத்.தாலுந் தினைப்போதிற்
கனவுகண்ட செயலே யன்றோ
வாரலாம் பரபோகந் திருச்சிற்றம்
பலகுருவை யடுத்தான் மாசு
பேரலா மவனடிக்கே குற்றவேல்
கிடைக்கிலின்னும் பிறக்க லாமே.

அரும்பதவுரை :

மகபதி - இந்திரன். ஆரலாம் - உண்ணலாம், மாசு - ஆணவ மலம். மாசுதருவதனை மாசென்றார்; இஃதாகு பெயர்.

### நேரிசை வெண்பா

88 பிறவியிலே யிப்பிறவி பேரின்ப மெய்தத்
துறவியிலே தன்னுருவந் தோற்றி - மறவியறத்
தென்றுறைசை மேவுதிருச் சிற்றம் பலகுரவ
னின்றுதவ வந்த தெவன்

அரும்பதவுரை:

பிறவியிலே - இருவினைக்கீடாக யானெடுத்த பிறப்புக்களிலே. இப்பிறவி - இம்மானுடப்பிறவியில். பேரின்பம் - என்றும் ஈறில்லாத வீட்டினை. எய்த - (அறியும் ஆற்றலும் காதலும் இல்லாத எளியேன்) அடைய. தன்னுருவம் - தனது திருவுருவத்தை, துறவியிலே தோற்றி - காமனை முனிந்து நெடுஞ்சடை மறைத்துக் கவின்ற கல்லாடை புனைந்த திருவுருவமாகத் தோன்றச் செய்து. மறவியற - (எனக்குளவாகிய) மயக்க நீங்க. தென்றுறைசை மேவு திருச்சிற்றம்பல குரவன் - அழகிய துறைசையின்கண் ணுறைகின்ற திருச்சிற்றம்பல தேசிகன். இன்று - இஞ்ஞான்று. உதவ வந்தது - அநுக்கிரகஞ் செய்ய எழுந்தருளியது. எவன் - யாதுகாரணம். துறவி - துறவு. இதனை மணிமேகலை "மாதவி துறவி"க்கு என்னுமடியானுணர்க.

### கட்டளைக் கலித்துறை

89 எவன்மறை யந்தத்தில் வாக்கிய ஞானத்தி லெய்து பொருள்
அவனிவ னாந்திருச் சிற்றம் பலவ னருட்டுறைசைத்

தவனிடத் தஞ்செழுத் துண்மைபெற் றோமினித் தாரணிமேற்
றிவநிலை மாறிமற் றெங்கெழுந் தாலென்னசெங் கதிரே

அரும்பதவுரை :

மறையந்தத்தில் - வேதத்தின் முடிவாகிய உபநிடதங்களிலுள்ள. வாக்கிய ஞானத்தில் - மஹாவாக்கிய ஞானத்தினால். எய்து பொருள் - அநுபூதியால் அடையப்பெறுகின்ற பொருள். எவன் - பரம்பொருள் யாவனோ. அவன் - அச்சிவன். இவனாம் - இவனே என்று யாவரும் சொல்லத்தக்க திருச்சிற்றம்பலவனும். அருள்துறைசைத் தவனிடத்து - யாவருக்கும் அருளை வழங்குகின்ற துறைசையின் கண்ணுள்ள பெருந்தவத்தை யுடையவனுமாகிய பரமாசாரியன் பால். அஞ்செழுத்துண்மையைப் பெற்றோம் - அஞ்செழுத்துண்மையைப் பொருளைச் செவியறிவுறுக் கப்பெற்றோம். (ஆதலால்) இத்தாரணிமேல் - இப்பூமியினிடத்தில். செங்கதிர் - ஞாயிறு. இனி - இனிமேல். திவநிலைமாறி - பகனிலை மாறுபட்டு. எங்கெழுந்தாலென்ன - எங்கெழில் என். எமக்கு ஆவது ஒன்றுமில்லை என்க. "இரவி யெண்டிசை மாறிலென்" என்பது கவி ராஜசிங்கன் வாக்கு.

அறுசீரடியாசிரிய விருத்தம்

90 கதியுதவு துறைசைவரு திருச்சிற்றம்
பலகுரவர் கதிரி னோடு
மதியுலவு திருமடத்தின் பந்தியிலுண்
பவர்களந்த வாணன் கையு
முதிரறிவு பெறுஞ்சேடன் றிருவாயுஞ்
சிங்கமா முகத்தி னோன்றன்
பொதிவயிறும் புரந்தரனார் திருவிழியும்
வேண்டுமெனப் புகலு வாரே.

அரும்பதவுரை

வாணன்கை - ஆயிரம். சேடன்வாய் - ஆயிரம். சிங்கமுகன் வயிறு - மிகப்பெரிய வயிறு. புரந்தரன்விழி - ஆயிரம். ஆயிரவகை அன்னம். ஆயிரவகைக்கறி ஏனையவும் அன்ன: ஆகலின், அன்ன முதலியவற்றை எடுத்தற்கு ஆயிரம் கையும், உண்டற்கு ஆயிரம் வாயும், அவ்வுணவுகள் சென்றடங்கப் பெருவயிறும், அவற்றின் பாகுபாடு தெரிதற்கு ஆயிரங் கண்களும் வேண்டப்பட்டன.

### கட்டளைக் கலிப்பா

91 வாருஞ் வாருஞ்ச பாபதி பூசையை
மகிழ்ந்து கும்பிட்டுத் தூபமுந் தீபமும்
பாரும் பாருஞ்சை வாகம மாதவர்
பந்தியிற்சென் றிருந்துசம் பாவன்ன
மாரு மாரு மெனவேதன் வாண்திறந்
தழைக்கு மேதிரு வாவடு தண்டுறை
சேரு மாதிருச் சிற்றம் பலகுரு
திரும டத்தினிற் சேகண்டி நாதமே.

அரும்பதவுரை :

ஆர்தல் - உண்ணல். நாதம் அழைக்கு மெனக் கூட்டுக. ஏகாரங்கள் அசை.

### நேரிசை வெண்பா

92 நாதமுதற் பூதம்வரை நானல்ல மற்றிவைகாண்
போதம் பசுவாம் பொருளாமேற் - பேதைத்
திறமகல நோக்குதிருச் சிற்றம் பலவ
விறையவனைக் காணாத தென்

அரும்பதவுரை :

மனமே! நாதமுதல் பூதம்வரை - நாதத்தத்துவமுதல் பூதத்துவம் இறுதியாகவுள்ள (கருவித் தொகுதிகளை) நானல்ல - பசுவாகிய யானல்லவாம். இவைகாண் - இக்கருவித் தொகுதிகளை யான் அன்றெனக் காண்கின்ற. போதம் பசுவாம் - ஞானத்தையுடையது ஆன்மாவாகும். மேல் - இவ்விரண்டிற்கு மேலாய் வியாபகமாயுள்ளது.பொருளாம் - பதிப்பொருளாம் என்று (திருவாய்மலர்ந்தருளி) பேதைத்திறமகல - பேதைத்தன்மை நீங்க. நோக்கு - நயன தீக்ஷை செய்தருளிய. திருச்சிற்றம்பல இறைவனை - குரு சிரேட்டராகிய திருச்சிற்றம்பல தேசிகரை. காணாதது என் - தரிசியாதது யாது காரணம்?

கருவித் தொகுதியாவன:- ஆன்மதத்துவம் இருபானான்கும், வித்தியாதத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்தும் ஆம் என்க.

கட்டளைக் கலித்துறை

93 என்னே சிவநிறைந் தெங்குநின்றானென் னிருவிழிக்கு
முன்னே தெரிந்திலன் மாயன்கொல் லோருவருண் முற்றுமுள்ளான்
றன்னே ரிலானென்று சாற்றினை யேதுறை சைப்பதி வாழ்
பொன்னே புகழ்திருச் சிற்றம் பலகுரு புங்கவனே.

அரும்பதவுரை :

துறைசைப் பதிவாழ் பொன்னே புகழ் திருச்சிற்றம் பல குருபுங்கவனே - துறைசையி லெழுந்தருளியிருக்கின்ற தேவகுருவாகிய வியாழப்புத்தேளும் புகழுகின்ற திருச்சிற்றம்பல குருராயனே. (எளியேனுக்குப் பதி இலக்கண முணர்த்துங்காலத்து) சிவன் எங்கு

நிறைந்துநின்றான் என்னே அருள் முற்றுமுள்ளான் தன்னேரிலான் என்று சாற்றினை- இறைவன் எங்கும் வியாபகமுள்ளவன் என்றும் என்னே பேரருளுடையா -னென்றும் தனக்கோருவமனில்லி என்றும் (அளவையானும் பொருந்துமாற்றானும் அநுபூதியானும் நுனித்தறிந்து) திருவாய்மலர்ந்தருளினை. என் இருவிழிக்கு முன்னே தெரிந்திலன் - (தேவரீர் கூறிய மூவிலக்கணங்களுள் வைத்து வியாபக இலக்கண -முடையவனும் அல்லன்) மாயன் கொல்லோ - பேரருளுடையாரும் தன்னேரிலாரும் கரந்தொழுகுதல் அவர் சால்புடைமைக்கு ஏற்றதன்றாகலின்) வஞ்சக முடையான் போலும் (ஆகையால் ஏனைய ஈரிலக்கணங்களுஞ் சித்தியாமை) என்னே - என்ன ஆச்சரியம்.

## எண் சீரடியாசிரிய விருத்தம்

94 புவியிலே திருமூலர் முதலாஞ் சித்த
புருடரனே கர்வாசம் புரிய மோசை
செவியிலே யறியவளர் துறைசை மேவு
திருச்சிற்றம் பலஞான தேசி காசொற்
கவியிலே யுனைப்புகழ பெற்றே னுள்ளக்
கறைகழுவித் தீக்கைகுறைமுடித்தாய் நல்லு
தவியிலே தாயனையாய் பிறவி நோயைச்
சாடினே னின்றுவிளை யாடினேனே.

அரும்பதவுரை :

திருமூலர் மூவாயிரம்வருடம் வாசஞ்செய்து திருமந்திரமருளிய கதை பெரிய புராணத்தறிக தீக்கைகுறை - நிருவாண தீக்கை. உள்ளக்கறை - ஆன்மாவைப்பற்றிய ஆணவம். உள்ளம் - ஆன்மா.

### நேரிசை வெண்பா

95 ஆடல் புரிபரமர்க் கன்றி முடி தாழான்
பாடல் புரியென் பணிகொண்டா - னீட
லகற்ற வருதிருச்சிற் றம்பல தேவன்
பகற்குலவு செங்கதிரொப் பான்

**அரும்பதவுரை**

நீடுஅல் - அநாதியாகப்பற்றி வருகிற ஆணவமல மாகிய இருள். அகத்திருளை நீக்கும் சிற்றம்பலதேவன் புறத்திருளை நீக்குஞ் சூரியனை ஒப்பான் என வினையுவமைபற்றியே கூறினமையின் இஃது ஒருபுடை யுவம மென்க.

### கட்டளைக் கலித்துறை

96 பார்கொண்ட சேடன் றலைப்பார நீங்கிடப்
பல்லுயிர்க்குஞ்
சீர்கொண்ட முத்திபஞ் சாக்கர மேயுப
தேசஞ்செய்வாய்
கார்கொண்ட சோலைத் திருவா வடுதுறைக்
கண்ணருளாற்
பேர்கொண்டு வாழ்திருச் சிற்றம் பலவ
பெருந்தகையே

**அரும்பதவுரை :**

பக்குவான்மாக்களுக்கெல்லாம் முத்தி பஞ்சாக்கரவுபதேசஞ் செய்து முத்தியளிப்பதனால் அவ்வான்மாக்கள் பூமியின்மேற் பிறப்பதில்லை. ஆகலான் சேடனுக்குச் சுமக்கும் பாரமு மில்லை யென்க. பேர் - புகழ். அருளாள் அருளோடு என்க.

## அறுசீரடியாசிரிய விருத்தம்

97 ஏற்றுநந்தி யாதியிரு பத்தொருவர்
பரம்பரையு மிலங்க முத்தி
தேற்றுசைவ குருவாகிய யெதிராச
னானதயா சிந்து நீயே
யாற்றுவெள்ளத் தங்கணநீ ரெனவெனையுன்
னடியாருள் ளாக்கிப் புன்மை
மாற்றுதிரு வாவடுதண் டுறைத்திருச்சிற்
றம்பலவா மதிதந் தாயே.

அரும்பதவுரை :

நீரென எனை ஆக்கி புன்மை மாற்று திருச்சிற்றம்பலவா முத்தி தேற்று குருவாகி இராசனான தயாசிந்துவாகிய நீயே மதி தந்தாய் என வினைமுடிவு செய்க. நந்திமுதல் இருபத்தொருவர் - முதற்கவி உரையானுணர்க. தயாசிந்து - கருணைக்கடல். மூன்றாமடியில் "ஊரங்கண நீர் உரவுநீர்ச் சேர்ந்தக்காற், பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்" என்னும் நாலடியாரின் கருத்துக் குறித்தமை காண்க. புன்மை - அறிவின்மை.

## நேரிசை வெண்பா

98 தாயே யருட்கடலே தங்கமே மெய்யடியார்
காயே பழுத்த கனிரசமே - நீயே
யிறைதிருச்சிற் றம்பலவா வெல்லா வுலகுந்
திறையளப்ப தாகுமடத் தில்.

அரும்பதவுரை :

திருச்சிற்றம்பலவா எல்லாவுலகும் மடத்தில் திறையளக்கு மாதலால் அருட்கடலே அடியார் கனியே கனிரசமே நீயே இறையென வினைமுடிபு செய்க.

கட்டளைக் கலிப்பா.

99 தில்லை வாழுஞ்ச பாபதி பூசனை
திருச்சிற் றம்பல தேசிகர் செய்திடச்
சொல்லை மாற்றிய சேகண்டி யோசையுந்
துங்க மாகிய சங்க முழக்கமும்
வல்லை யார்க்குங்கைத் தாளமுங் கொத்தஞ்சு
மணியி னோசையுந் தேவாரப் பண்களு
மெல்லை தீரவிவ் வண்டப் பரப்பெலா
மேகியப்புறம் போகி முழங்குமே.

அரும்பதவுரை :

வல்லை - விரைவு. சொல்லை மாற்றுதல் - தன்னொலி மிகுதியால் ஒருவர் சொல்லுஞ் சொல் மற்றொருவர்க்குக் கேளாத வண்ணஞ் செய்தல்.

**நேரிசை வெண்பா**

100 முழங்கு மவர்வாயை முகிழ்வித்துச் சேவை
வழங்கு மனவழக்க மாற்றுந் - தழங்குபுனற்
றென்னுறைசை மேவுதிருச் சிற்றம் பலகுரவ
ரென்று மகிழ்கட் டியம்.

அரும்பதவுரை :

கட்டியம் முகிழ்வித்துச்சேவை வழங்கும் மனவழக்க மாற்றமென வினைமுடிபு செய்க. கட்டியம் - விருது கூறுதல். முழங்குதல் - ஈண்டுத் தோத்திரஞ்செய்தல். முகிழ்வித்தல் - மூடச்செய்தல். மனவழக்கம் - மனத்தின் சஞ்சாரம். சேவை - வழிபாடு. தழங்கல் - முழங்கல்.

## கட்டளைக் கலித்துறை

101 இயல்பாய நின்னடி யார்திருக்
கூட்டத்தி லென்னையுமே
வயல்பாயுந் தண்புனல் புல்லுக்கும்
பாய்ந்தென மல்கவைத்தாய்
தயவோ ருருக்கொண்டு வந்தென
வாவடு தண்டுறைவாழ்
நியமா கமத்திருச் சிற்றம்
பலவசெந் நீர்மையனே.

அரும்பதவுரை :

நீர்மையனே வைத்தாய் என வினைமுடிபு செய்க. மல்கவைத்தாய் - தழைய வைத்தாய். நியமாகமம் - சிவயோகத்தை விதிக்கின்ற ஆகமங்கள். இனி, வேதத்தை யுணர்த்தும் நிகமமென்னுஞ் சொல் நியமமெனத் திரிந்து நின்றதெனினுமாம்.

(துறைசைக் கலம்பகமும் மூலமும்
அரும்பதவுரையும் முற்றிற்று.)



# திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம் குறிப்புரை முதலியன. (பிற்சேர்வு) நூல்

*1. தரவு :*

*நீர்மேகம் அனையான் - நீருண்ட மேகம் போன்றகரிய திருமேனியுடைய திருமால். கமலம் - திருமாலின் திருவுந்தித் தாமரை. மேகம் அனையான் சீர்மேவு சேவடியும், கமலமனையான் திருமுடியும் காண்பதற்கரிய சிவபெருமான் என்க.*

*"பரம்பிரம மிவனென்றும் பரசிவன் தானென்றும் பரஞானம் இவனென்றும் பராபரன் தானென்றும் - அரன் தரும் சீர் நிலையெல்லாம் இவனே என்றும் அருட்குருவை வழிபடவே அவன் இவன்தானாயே, - இரங்கிய வாரணம் யாமை மீன் அண்டஞ்சினையை இயல்பினோடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும் - பரிந்திவைதா மாக்குமா போற் சிவமே யாக்கும் பரிசித்தும் சிந்தித்தும் பார்த்துந்தானே" என்பது சிவஞான சித்தியார். இதற்கு ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் பொழிப்புரை வருமாறு:- "சிவபேதம் அனைத்தும் குருமூர்த்தமே எனத்தேறி ஞானாசாரியனை வழிபடுக: அங்ஙனம் வழிபடப்பெறின், சிவன் இக்கருவை ஆவேசித்து நின்று நாடோறும்செய்யும் பரிசம் முதலிய மூன்றினும் அவ்வுயிரைத் தன் வண்ணமாகச் செய்தருளுவன்." அந்திவண்ணர் - சிவபெருமான். தென்புவி - தென்னாடு திருக்கயிலாய பரம்பரைத் திருநந்தி மரபு ஸ்ரீ மெய்கண்ட சந்தானத்து ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக பரமாசாரியர் வழியில் பன்னிரண்டாவது ஆசிரியர் இத் திருச்சிற்றம்பல தேசிகர் என்க.*

இக்குருமூர்த்தம் திருவாவடுதுறையிலே ஸ்ரீ மாசிலாமணி யீசுரர் கோயிலின் வடபால் காவிரிக்குப் போகும் வழியில் இரண்டாங் குருமூர்த்தமாகிய ஸ்ரீ மறைஞான தேசிகர் கோயிலின் பின், 3 வது ஸ்ரீ அம்பலவாண தேசிகருடைய சமாதியின் வடபுறம் உள்ளது.

தாழிசை:

விருது - வெற்றி. பொறி வண்டு - புள்ளிகளையுடைய வண்டுகள். பண் விரிக்கும் - இசைப்பாட்டைப் பாடுகின்ற. கேயூரம்- வாகுவலயம் என்பது தோள்வளை. அரவப்பணி - பாம்பாகிய ஆபரணம். மாயூரம் - அம்மையார் மயில்வடிவாக பூசித்த தலம்: திருமயிலாடுதுறை. மாஊர் - பெருமை தாங்கிய ஊர். காஞ்சி - காஞ்சிபுரம். பிரம தேவரால் பூசிக்கபட்டமையின் அப்பெயர் பெற்றது. க - பிரமன். கண் நுதலார் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். நுதற்கண்ணர் என மாறுக. வைப்பு - சேமநிதி. இத்தலத்தில் உள்ள சுவாமி திருநாமம் மாசிலாமணியீசர் தேவியார் ஒப்பிலா முல்லையம்மை. பிறவிக் கடல் - பிறவியாகிய கடல். கருச் சுற்றுங் கடல் - கெர்ப்பாமாகிய சுழியில் வைத்தழுத்துகின்ற கடல் என்க.

அராகம்:

பகர் பொருள் பதி பசுவோடு தளை - சைவசித்தாந்தத்தில் பேசப்படும் பொருள்கள் மூன்று. அவை பதி பசு பாசம் என்பன. பதி - கடவுள், பசு - ஆன்மா, தளை - பாசம். உயிர் - ஆன்மா.

*தாழிசை:*

குருமூர்த்திகள் உபதேசித்த உபதேச மொழியின் இனிமையை ஆசிரியர் பலபடியாகப் பாராட்டுகின்றார். இது காறும் பிறப்பிறப்புக்களிற் பட்டுச் சுழல வைத்த வலிய வினையைக் கெடுத்துத் தேவரீர் திருவடித் தாமரை கட்குப் பணிவிடை செய்யும் பேறு கிடைப்பதாயின் அதுவே அடியேனுக்கு முத்திப்பேறு என்கிறார். இதை விட வேறாக முத்தியில்லை என்றபடி. இதனை, "ஞானாக மங்களெல்லாங் கேட்டருளி நந்தீசர், ஆனாத முத்தி யடையாமல் - வானோங்குங், காரார் மிடற்றான் கயிலைமலை காவலனாய்ச், சாரூபம் பெற்றதுவென் றான்" என்னும் சதமணிக்கோவை 19-ஆவது செய்யுளையும், "உபதேசித்த குரு திருமேனியை யனவரதமுந் தெரிசிக்கப் பெறிற் சாயுச்சியமும் வேண்டா" என்னும் அதன் பொழிப்பையும் நோக்கியுணர்க.

*அம்போதரங்கம்:*

மெய்கண்ட கலை - ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனார் அருளிச் செய்த சிவஞான போதம். தவன் - தவத்தையுடையவன். மேதை - அறிவு, ஈண்டுச் சிவஞானம். ஈர்தல் - அறுத்தல்.

*2.*

ஆரணம் - வேதம். ஆகமத் தொகை - இருபத்தெட்டு ஆகமங்களும், உபாகமங்ளும் பிறவும். ஊழி - ஊழிக்கலாம். திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் அநுக்கிரகம் செய்த ஒப்பற்ற உபதேச மொழியே அமையும் என்றபடி.

*3.*

மனமே! துறைசை நகர்க்குத் தலைவனாகிய திருச்சிற்றம்பல தேசிகருடைய திருவடி நீழலை அணைவாயாக. ஆனந்தமாகிய தேன் தானேமிகும்.

ஆமாறு - செய்யத்தக்க செயலை. குயில்கள் இனிய பாடல்களைப்பாடிநெருங்கும் தேமா மரங்களில் நிறைந்த கனிகள் தொங்குகின்ற செழிப்பாகிய துறைசை. மாந்தளிர்களைக் குயில்கள் அலகாற் கோதி இசைப்பாட்டுக்களை நன்குபாடும். அதனாலேயே "மாங்குயில்" எனச் சிறப்பிக்கப்படும். "குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறை" என்பது ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் திருவாக்கு. தூங்கும் - தொங்கும்.

4.

தங்கினென் - தங்கினவனாகிய எனக்கு இருளைக் கிழித்தான் என்க.

5.

ஆசாரியான் திருவடித் தாமரைகளை வணங்குவோம் என ஒருதரம் நினைத்தாலும் நல்வினை வந்து பொருந்தும். இது சிவ நல்வினை. கற்பக தருவை யொப்ப வேண்டுவார்க்கு வேண்டியதாங் குதுவும் அவன் திருமடத்தைச் சாரின் தவமெல்லாம் எளிதிற் கைக்கூடும். திருச்சிற்றம்பலம் என அவன் திருப்பெயரை ஒரு தடவை சொன்னால் அதுவே பல நூறாயிரம் ஸ்ரீ பஞ்சாக்கர செபஞ் செய்த பயனாம். ஆசாரியான் திருமேனி தரிசனமே சிவபாவனையாம். அவனை வணங்கினால் அப்பொழுதே சிவஞானம் கூடும். மெய்ம்மையான அன்புடன் அவனிட்ட கட்டளையைச் செய்யும் மெய்யடியார் களுக்கு அபர முத்தி, பர முத்திப்பயன் சிறப்புறக் கிட்டும் என்றபடி. எனவே, திருச்சிற்றம்பல தேசிக மூர்த்திகள் பேரருளோடு பொருந்தியவர் என்பது காண்க.

*6.*

யான், எனது என்பன அகப்பற்று புறப்பற்றுக்கள் இவ் அகப்பற்று புறப்பற்றுக்க ளற்றாரே பிறப்பற்றார்: அல்லாதார் பிறப்புக்களிற் பட்டுச் சுழல்வர் இதனை,

"யானென தென்னுஞ் செறுக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்."

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்"

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்"

என்னும் திருக்குறள்களானும், பரிமேலழகர் செய்த உரைகளானும் அறிக இனி, உடல் பொருள் ஆவி மூன்றையும் ஆசாரியாருக்குத் தத்தம் செய்தலை "அன்றே யென்ற னாவியு முடலு முடைமையெல் லாமுங் - குன்றே யனையாய் என்னையாட்கொண்டபோதே கொண்டிலையோ" என்னும் திருவாசகப் பகுதியால் அறியலாம். பார் - பூமி. வான் மேகம். கைம்மாறு - பிரதியுபகாரம்.

*7.*

அம்பலத் தாண்டவன் - பொன்னம்பலத்திலே அனவரத தாண்டவம் செய்தருளும் கூத்தப்பிரான். அடியார்கள் அருச்சனை செய்தற்குரிய மூர்த்தியாக எழுந்தருளி வந்து ஆட்கொண்டவன் என்க. தேறும் - தெளிந்த. நாவன் - நாவினையுடையவன். தேசிகன் ஆவன் என வினை முடிபு செய்க.

8.

திருச்சிற்றம்பல பரமாசாரியாரைத் திருவாவடுதுறையிலே அவர் எழுந்தருளியிருக்கின்ற திருமடத்திற் சென்று நாவால் வாழ்த்த, தலை தாழ்த்து வந்திக்க, நாம் சென்றால் மனமே!முத்தி ஆவது: பாசம் அழிவது. அருள் அறத்தின் தே - கருணையோடு கூடிய தரும தேவதை.

9.

துறைசைமா நகரிலுள்ள உண்மையடியார் கூட்டத்தை யடைந்தோம். இனி,பொய் யடியாருடைய கூட்டத்தினாலுண்டாகும் கேடுகள் தொலையும் என்றபடி.

10.

போதம் - சிவஞானம். கா - சோலை. தேசம் - உலகம்.

11.

குவலயம் - பூமி. புரந்தரன் - இந்திரன். போதன் - பிரமதேவர். மற்றையோர்கட்கும் வரந்தரும் பெருமையார் என்க. இணைத்தாள் கண்டோர் எண்ணலார், படிகுவார், பெருமையார் எனக்கூட்டுக.

12.

கனகம் - பொன். தவத்து - தவத்தினையுடைய. காதல் - அன்பு. துன்று - நெருங்கிய. மதி தருங் கலை - மதிக்கத்தக்க சாஸ்திரங்கள்; மதியைத் தருங்கலைகள்முறை - திருமுறைகள்: தேவார திருவாசகங்கள். எழில் வாய் தரும்படி - அழகு பொருந்துமாறு. முனம் அடைந்தவர் - சந்நிதியிற் சென்ற சரணாகப் புக்க அடியார்கள். மிடி - வறுமை.

15.

அரன் ஆவை அட்டு கண்டு அருள் சேர் துறை - ஆவடுதுறை. சிவபிரான் வந்த உமாதேவியாருடைய பசு வடிவத்தை மாற்றி யணைத் தெழுந்தாராகலின் அப்பெயர் பெற்றது. சந்ததம் - எப்பொழுதும்.

16.

ஆதீன முதற்குரவராகிய ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகள் குருபூசை விழாவில் அன்னக்கொடி கட்டிப் பத்து நாட்களிலும் அன்னம் வழங்கும் பெருஞ்சி றப்புக் கூறுதல் காண்க.

32.

இழையார் - ஆபரணங்கள் யணிந்த பெண்கள். விதனம் - துன்பம். கோகிலம் - குயில்.

33.

மருங்குல்-இடை, காஞ்சி - எழு கோவை மணி வடம். இருகோவை வடம் எனவும் கூறுவர். மால் - மயக்கம். திருமால் என்னலும் ஆம்.

59.

மயல் - மயக்கம், திமிரம் - இருள்

60.

தாரணி - பூமி, துய்யர் - பரிசுத்தர்

61.

பொங்கர் - சோலை

62.

மங்காமல் - பிறப்பிறப்பிற்பட்டுக் கெடாமல். வண்மை - வள்ளற்றன்மை. ஆழி - சக்கரப்படை. மாயவன் - கரியோனாகிய திருமால்.

65.

கடத்திலே வருமுனிவர் - குடமுனிவராகிய அகத்தியர். இடத்திலே வலத்திலே என்பன முரண்தொடை.

66.

முண்டகத்தாள் - தாமரை மலர் போன்ற திருவடி.

68.

திருச்சிற்றம்பல தேசிகர் காலத்து ஆன்மார்த்த பூசையைச் சிறப்புறச் செய்தருளுமாறு நீங்காத அன்பையுடைய முத்துக்குமரன் என்பார் செய்வித்துக் கொடுத்த வெள்ளித் தேர் கயிலாயக் காட்சியை யொத்தது என்க. எள்ளி - இகழ்ந்து.

70.

திருவாவடுதுறை மடத்திலே அழைத்து யாவருக்கும் அமுது அருத்துவதால் தேவரும் மக்களுடம்புடன் இங்கே வர எண்ணுவர் என்றபடி.

74.

ஆசாரியர் திருமேனி தரிசனப்பேறு இத்தகைத்து எனச் சொல்லப்படுகிறது.

76.

ஆன்மார்த்த பூசனைத் தரிசனவிசேடம் காமுகராயினும், தவத்தை யுடையவராயினும், அவருடைய வினைகளெல்லாம் கெட்டொழியப் பண்ணும் என்றபடி.

*89.*

"எங்கெழின் ஞாயிறு எமக்கேலோ ரெம்பாவாய்" என்னுந் திருவாசகப் பகுதியை நினைப்பிக்கின்றது இச் செய்யுள்.

*90.*

இப்பாடல் பந்தியிலுண்ணும் உணவு நிலையினை உணர்த்துகின்றது. மாகேசுர பூசைச் சிறப்புக் கூறிய படி.

*91.*

சேகண்டிநாதச் சிறப்புக்கூறுவது இப் பாடல்.

*92.*

இத் திருமடத்திலே இரவில் சயனஞ் செய்திருக்கும் மெய்யடியார்களுடைய செவியிற் படும்படி பூசை செய்யும் ஓசையும் சித்தர்கள் ஓசையும் கேட்கும் இயல்பு கூறியபடி.

*99.*

நாடோறும் பூசைக்காலத்திலே நிகழும் சேகண்டி ஓசை, சங்கமுழக்கம், கைத்தாள வொலி, ஐந்து கொத்து மணியின் ஒலி, தேவாரப் பண் பாடும் இசை முதலியவற்றின் மேம்பாட்டை யுணர்த்தியவாறு.

உ

சிவமயம்

# திருச்சிற்றம்பல தேசிகர் கலம்பகம்

## செய்யுள் முதற்குறிப்பகராதி

திருச்சிற்றம்பலம்

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

திருச்சிற்றம்பலம்

- ஆளுடைய பிள்ளையார்.

உ

சிவமயம்

# திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானம் திருவாவடுதுறையாதீனத்து ஞானபரம்பரை வருமாறு

1. அருள்திரு நமசிவாய மூர்த்திகள் (ஆதீனக்குரு முதல்வர்)
2. அருள்திரு மறைஞான தேசிகர்
3. அருள்திரு அம்பலவாண தேசிகர்
4. அருள்திரு உருத்திரக்கோடி தேசிகர்
5. அருள்திரு வேலப்பதேசிகர்
6. அருள்திரு குமாரசுவாமி தேசிகர்
7. அருள்திரு பிற்குமாரசுவாமி தேசிகர்
8. அருள்திரு மாசிலாமணி தேசிகர்
9. அருள்திரு இராமலிங்க தேசிகர்
10. அருள்திரு வேலப்ப தேசிகர்
11. அருள்திரு பின்வேலப்ப தேசிகர்
12. அருள்திரு திருச்சிற்றம்பல தேசிகர்
13. அருள்திரு அம்பலவாண தேசிகர்
14. அருள்திரு சுப்பிரமணிய தேசிகர்
15. அருள்திரு அம்பலவாண தேசிகர்
16. அருள்திரு சுப்பிரமணிய தேசிகர்
17. அருள்திரு அம்பலவாண தேசிகர்
18. அருள்திரு சுப்பிரமணிய தேசிகர்
19. அருள்திரு வைத்தியலிங்க தேசிகர்
20. அருள்திரு அம்பலவாண தேசிகர்
21. அருள்திரு சுப்பிரமணிய தேசிகர்
22. அருள்திரு அம்பலவாண தேசிகர்
23. சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாசாரியசுவாமிகள் அவர்கள் தற்பொழுது அருளாட்சி புரிகின்றார்கள்.

